உ

ஸ்ரீ குமரன்றுணை.

# மறைப் புத்தகம்

என்னும்

# கதிர்காம இரகசியம்.



கொழும்பு

ஆனந்தா அச்சியந்திரசாலையில் பதிப்பிக்கப்பெற்றது.

1926

உ

ஸ்ரீ குமரன் றுணை.

# மறைப் புத்தகம்

என்கிற

# (கதிர்காம இரகசியம்.)

முதன் முறை

இஃது
கதிர்காமக் குருநாதனின் றிருவருட் பிரகாசனும்
யாழ்ப்பாணம், கொழும்புத் துறையில் திருமேனியாய் விளங்கும்
ஞான யோகீஸ்வரரின் திருவருள் பெற்றவனும்
இராமநாதபுரம் ஜில்லா
திருக்கோஷ்டியூருக்குச் சமீபம்
அட்டமாசித்தி யென்கிற பட்டமங்கலத்து
நயினப்பன் கரும்பீசன் உமை மங்களாம்பிகை
சந்நிதானத் தொண்டனும்
தஞ்சாவூரைச்சார்ந்த இராஜமன்னார்குடிச் சுதேசனும்
ஆங்கிலத்தில்

**C. R.**

என்னும்

இராஜாசாமி

என்பவரால் இயற்றி
கதிர்காமச் சந்நிதானத்தில் பிரசங்கித்துப் பாடிய
கதிர்காம இரகசியம், கதிர்காம கீர்த்தனைகளை
ஷை அட்டமாசித்தி
பட்டமங்கலச் சந்நிதானத்து பிர்ம சொரூபி
வீ. சோ. ராம. காசி செட்டியார் அவர்களின்
ஆதரவில்
கொழும்பு, வெள்ளவத்தை
திருக்குறட் பயிற்சிக் கழகத்தாரால்

கொழும்பு
ஆனந்தா அச்சியந்திரசாலையில் பதிப்பிக்கச்செய்து
கதிர்காமச் சந்நிதானத்தில் அரங்கேற்றப்பெற்றது.
1926

உ

குமரன் துணை

# கதிர்காமக் காட்சியும் கண்டுவந்தசாட்சியும்

"கலைமகள்" பத்திராதிபர்

திரு. இ. தம்பிராசா அவர்கள்

கலைமகள் பத்திரிகைக்கு எழுதியது

———:():———

நான், சில வருடங்களாகக் கதிர்காமத்தில் நடைபெறும் ஆடி மாதத் திருவிழாவுக்குச் சென்று சுவாமி தெரிசனஞ் செய்து திரும்புதல் வழக்கம். செல்வது எப்படி? எப்பொழுது? என்றால், தீர்த்தம்; மூன்று அல்லது நான்கு நாட்களுக்கு முன் தான், ஸ்தலஞ் சேர்வது. ஆனால், சென்றவருடம், அம்முறைப்படியிலாது ஐந்தா நாள் உற்சவத்திற்கே அங்கு இருக்கும்படி நேர்ந்தது.

மாணிக்க கங்கையைக் கடந்து, மார்க்கண்டு முதலியாரின் திருமடத்தைச் சேர்ந்தேன். மடத்தினுட் புகுந்தேன். தங்கி இருந்தேன். கொஞ்சநேரங் கழிந்ததும், சுற்றிவந்தேன். சுற்றி வரும்பொழுது, அங்கு தங்கியிருந்த பலஅடியார்களையும், பிரபல கனதனவான்களையுங் கண்டேன். அதுமாத்திரமல்ல! மடத்தின் எதிர்வாயல் இடப்புறத்தின் ஓர் மூலையில், தனித்து இளம்பிராயத்தினராய் ஒருவர் உட்கார்ந்திருந்ததையும் பார்த்தேன். மற்ற எல்லாரையும்விட, தனித்திருந்தவர் பேரில் எனக்கு ஒருவித பிரமை தோன்றிற்று. அப்படி தோன்றச் செய்தது, அவரின் முகக் குறிப்பே! முகக்குறிப்பில் என்ன இருந்தது? பக்திவிலாசம் நிறைந்து, அருள் மலிந்திருந்தது. அந்த அருள் விலாசம் இருந்த தால், அவரோடு இரண்டொரு வார்த்தை பேச; நான் ஆவல் கொண்டேன். ஆவல் நிறைபெற அவரோடுபேச ஆரம்பித்தேன்.

சுவாமின்! தாங்கள் எந்த ஊர்? இங்குவந்து எத்தனை நாளாயிற்று? எனக் கேட்டேன். அதற்கு, அவர், தான் இந்தியாவில் தஞ்சா வூருக்கு அருகிலுள்ள இராஜமன்னார்குடிச் சுதேசன் என்றும் தனதுபெயர் ஆங்கிலத்தில் C R. என வழங்கிவரும் இராஜா சாமி யென்றும், மன்னார்குடியிலிருந்தே கதிர்காமம் யாத்திரை வந்திருப்பதாயும், நேற்றுதான் வந்தேனென்றும், வாய் நிறைந்த மதுரச் சொற்களால் பதில் தந்தார். இந்த வரலாற்றைக் கேட்டு இவரை விட்டுப்பிரிய தயங்கினேன். விட்டுப்பிரிந்தேன். பிரிந் தும் பின்னுந் தேடினேன். காணாததால் வருந்தினேன். வாடி னேன்.

அதே மடத்தின் தெருவாயல் வலப்புறத்திலுள்ள அறையில் காஞ்சிபுரம் கோவிந்தானந்த சுவாமிகளும், அவர்களோடுவந்த மலையாளம் சரஸ்வதி சுவாமிகளும், இடம்பெற்றிருந்தனர். மாலை மணி சுமார் நான்கு இருக்கலாம். அந்நேரம் அறையிலிருந்த சுவாமிகளோடு, பேசிக்கொண்டிருந்தேன். இந்த சமயத்தில் எதிர்பாராதபடி இராஜாசாமியும் சரேலென்றுகதவைத் திறந்து, எங்களோடு ஒருவராய் உட்கார்ந்தார். நானும் சரஸ்வதி சுவாமியு மாக சில விஷயங்களைச் சம்பாஷித்தோம். சைவ சமயம் எக் காலத்தியது? யாரால் அனுட்டிக்கப் பெற்றது? அதன் பூர்வ இரகசியம் யாருக்குத் தெரியும்? ஒருவருக்குந் தெரியாதென, தனக்குத்தான் தெரியுமென்னுங் குறிப்பை, சரஸ்வதி சுவாமிகள் சுட்டிக்காட்டினார். "ஆனால் சுவாமி! தாங்கள் சைவ சமயத்தின் ஆதிக்கம்பெற்றவரென, தங்களது வாய்மொழியால்தெரிகின்றது. ஆகலின், அந்தவிவரம் எல்லாருந்தெரிந்துகொள்ளவேண்டியது அவசியந்தானே! அதை, எடுத்துச்சொல்லிவிட்டபின்னரே மற்ற தை ஆரம்பித்தல் வேண்டுமென," இராஜாசாமிகேட்டார். இதற் குள் கோவிந்தானந்த சுவாமி, சரஸ்வதிசுவாமிக்கு, நீர் அங்ஙனந் தெரிவித்தது கூடாமையே! என்பதற்குப் பொருத்தமான சில விஷயங்கள் சொன்னார். கூட்டங் கலைந்தது. நானும், இராஜா சுவாமியுமாக வெளியில்வந்தோம். நால்வருள் மாணிக்க வாசக சுவாமிகள் எப்போதையவர்? எனக்கேட்டேன். அவர், பதிலளித் தது எனக்கு முற்றுஞ் சந்தோஷமாயும் ஒப்புக்கொள்ளும் வகையிற் சொல்லி முடித்தார். விட்டுப்பிரிந்தார்.

அடுத்த நாள், ஆறுவது நாள் திருவிழா. சனிக்கிழமை முற்பகல் சுமார் பத்துமணி இருக்கலாம். அந்நேரத்தில் இராஜா சாமி யென்பவர், மாணிக்க கங்கையில் நீராடிவிட்டு, மடத்தின் ஓர் புறத்தில் கங்கையில் நனைத்து வந்த தனது வஸ்திரங்களை உலர்க்கவிட்டு, இடையில்தனது பச்சைச்சால்வையைத் தரித்துக் கொண்டிருந்தார். நான் இருந்தாற் போல எழுந்து மடத்திற்குப் போய், நின்று கொண்டிருந்த இராஜா சாமியின் இடது கையை எனது வலது கையாற் பிடித்து, கொஞ்சம் நானிருக்கும் அறை வரையில் வந்து போக வேணுமென்று சொனனேன். அவரும் இசைந்தார். பிடித்தபிடி விடாமலேயே, என் அறைக்குள் அழைத்து வந்து, உட்காரவைத்தேன். உட்கார்ந்ததும் நான் அவர் முகத்தைப் பார்த்து, ஒருமணி நேரம் வரையில், கதிர்காமத்தின் அருமை பெருமைகளை அவருக்கு வியாக்யானம் செய்தேன். என் வியாக்யானம் முடிகிறவரையில், எனது வாய்மொழியை அவர் கவனித்தாரே யல்லாது, பதில் சொன்னவரல்ல. (அந்த சமயம் நான் அவருக்கு என்ன என்ன சொன்னேனென்பதை விளம்பரஞ் செய்யவேண்டியது அவசியமே! ஆனல் என்னையே மறந்து நான் சொல்லியதால், அந்த இரகசியம் எப்படி ஞாபகத்திலிருக்கும்)

எனது பேச்சு முடிந்ததும், நான் சொன்னதை யெல்லாம் அமைதியோடு கேட்டிருந்தவர், புன்முறுவலுற்று என்னைப் பார்த்து, சுவாமி! "இப்பொழுது சொல்லி வந்த இந்த சமாச்சாரங்களை என்னிடம் தெரிவித்து வரும்படிகதிர்காமக் கோவிலுக்குள் இருக்கும், அந்த முருகபிரான் இந்த விஷயங்களைத் தங்களிடத்தில் தெரிவித்து, என்னிடம் சென்று தெரிவித்து வாவென தங்களை தூது அனுப்பினாரான்ன"? என்று, அங்கலாய்த்து அங்கலாய்த்து கேட்டார். இவர் இந்தவிதங்கேட்டதன் பிறகே, ஓஹோ! நாம் என்ன என்னவோ எல்லாம் இவருக்குச் சொல்லியிருக்கின்றோம். என்கிற நினைவு எனக்கு எட்டியது. எட்டியதும், என்ன என்னை இப்படி கேட்கின்றீர்களே! என; அவரைத் திரும்பக்கேட்டேன். அதற்கு அவர் பதில் சொல்லியதாவது, "இந்த ஒருமணி நேரம் வரையில் தாங்கள் சொல்லியது எல்லாம், சற்று நேரத்துக்குமுன் நான் மாணிக்க கங்கையில் நீராடிக் கொண்டிருக்கும் பொழுது என் வாயற்கூட சொல்லாமல், மனதிலே நினைத்து வருந்தியதை,

ஒன்றுகூட விடாமல் வெளியிட்டதிலிருந்து, அந்த முருகபிரான் தான், தங்களை என்னிடம் தூது அனுப்பி என்னை ஆற்றுதல் செய்வித்தான் எனவே நினைத்து, தாங்கள் முருகபிரானுக்குத் தூதனாக வந்தீர்களாவெனக் கேட்டேன்" என்றார். பிறகு தாங்கள் எண்ணி வருந்தியதுதான் என்ன? நான் சொன்னதுதான் என்ன என்று கேட்டேன். அதற்கு அவர் தனது பக்தி விசுவாசத்தையும், கொண்டுள்ள வைராக்கியத்தையும், ஒருவித பொருட்படுத்திக் கூடிய சீக்கிரத்தில் அவர் வெளியிடப் போகிற, "மறைப் புத்தகம்" என்னும் நூலில் விவரமாய்க் காணலாம் என்றார். பிற்பகல் சுமார் ஏழுமணி இருக்கும். கோவிலுக்குச் சென்றோம். கடவுள் வழிபாடு செய்தோம். திரும்பினோம். ஒருவரை யொருவர் விட்டுப்பிரிந்தோம்.

அடுத்த நாள் ஞாயிற்றுக்கிழமை, அதிகாலையில் இராஜாசாமியைத் தேடினேன், காணவில்லை. நானும் வேறு சிலருமாகச் செல்வக் கதிர்காமஞ் சென்றோம். பிற்பகல் மூன்றுமணிசுமாருக்குத் திரும்பி விட்டேன். மாலை ஐந்துமணி சுமாருக்கு இராஜாசாமியைச் சந்தித்தேன். காலையில் செல்வக் கதிர்காமஞ் சென்றிருந்ததைப் பற்றியும், அவரைத் தேடியுங் காணாததால் விட்டுப் போனதைப்பற்றியும், கண்டிருந்தால் கூடவே அழைத்துப்போய் இருப்பேன் என்பதைப் பற்றியும், சொன்னேன். "எங்கே"? என்றார். செல்வக் கதிர்காமம் என்றேன். அதற்கு அவர். "உள்ளகதிர்காமத்திலேயே ஒன்றையுங் காணவில்லையே செல்வக் கதிர்காமத்தில் என்ன இருக்கப் போகின்றது" என்று சொன்னார். அவர் சொன்ன சொல்லிலிருந்து உள்ளபடியே உள்ளன்பினால் மெலிந்து மனம் மிகவும் நொந்துசொன்னதாகவே நான்கண்டுகொண்டேன்? கோவிலுக்குப் போய்வருவோமென்று அழைத்தேன். "நான் வரவில்லை நீங்கள் சென்று வாருங்கள்" என்றார். சரியென்றேன். கோவிலுக்கு நடந்தேன்.

கோவிலுக்குப் பின்புறத்தில் ஜனங்கள் கும்பலாய் நின்றனர். என்னவென்று விசாரித்தேன்; யாரோ ஒருவர் கழுத்தை கத்தியினால் வெட்டிக்கொண்டார் படுக்க வைத்திருக்கிறது; என்றார் தீர விசாரித்ததில் 30, வயதுள்ள ஒரு வாலிபன் சந்நிதானத்தின்

முன்னே நின்று, அன்று பகல் பன்னிரண்டு மணிக்கு தன் கையி லிருந்த கத்தியினால், குறவனையை அறுத்ததில், சரியாக அறுபட வில்லையென்றும், மறுபடியும் கண்டத்தில் தசை சிதறி இரத்தம் பெருவாரி பெருக முழுபலத்தோடும், குத்தி சிதைத்து விட்டு கீழே விழுந்து விட்டான் என்பதாகவும் கோவிற் கப்புறானை, உடனே வந்து விபூதி தெளித்து மஞ்சள் துணிசுற்றி, சந்நிதானத் தின் பின் பக்கத்தில், கிடத்தியிருக்கிறார்கள் என்றும், காயம் பல மாகத்தான் இருக்கிறதென்றும், நேரில் கண்ட துரைத்தனத்தா ரின், போலீஸ் சேவகர் சொன்னார். காயம்பட்ட அந்த வைராக்ய பக்தன் அன்றிரவு எட்டுமணி சுமாருக்கு, படுக்கைவிட்டு எழுந்து போய் சந்நிதானத்தில் தீர்த்தம் வாங்கி உட்கொண்டான் எனவுந் தெரிந்தது.

அன்றிரவு எட்டுமணிக்கு மேல் யானையின்பேரில் அம்பாரம் வைத்து, அதில் சுவாமியை எழுந்தருளச்செய்து முக்கோணவீதி வழியாக வலம் வந்தது. நானும் தொடர்ந்தேன். கோவிலில் இருந்து முக்கோணவீதி இடது பக்கம் மத்தியில் ஏராளமான ஜனக் கூட்டத்திடையே, முன் சொன்ன இராஜாசாமியைக் கண்டேன். அவரோடு பேசிக்கொண்டு வருகையில், இந்தக் கதிர் காமத்தலத்திற்குள்ள பெருமை இந்தியாவைவிட விசேஷந்தானே என்றேன். அதற்கு அவர் கதிர்காமத்தில் என்ன இருக்கிறது: இந்தியாவிலுள்ள சுப்ரமண்ய ஸ்தலங்கள் எல்லாம், இந்தக் கதிர் காமத்திற்கு மேலான பெருமை பெற்றிருக்கிறது என்று, பட படப்பாய் சொன்னார். இவர் பட படத்துச் சொன்னதிலிருந்து இவர் ஏதோ ஒருவித கருத்தோடு வந்திருக்கின்றார்: அக்கருத்து நிறைவேறாமல் இருக்கும் போலிருக்கிறது அதனால் தான் இவர் இவ்வண்ணம் பேசுகின்றார்; என நினைத்து, சுவாமி! இன்னுங் கொஞ்ச நேரத்தில், எதிர் பாராத ஒருஅதிசயச் சம்பவம்நடக்கப் போகிறதைப் பாருங்கள் என்று சொல்லி, அவரை நான் கைப் பிடியாகப் பிடித்துக்கொண்டு நடந்தோம். வள்ளி அம்மன் சந்நி தானம் வந்தோம். அங்கும் அப்படித்தான் பல பல விதமாக வாயில் வந்தபடி பக்திநிறைந்த சொற்களால், இந்தக் கதிர்காம ஸ்தலத்திலிருக்கும், சுப்ரமண்யக் கடவுளுக்கு, குருநாதன், போத குருநாதன் என்ற பெயர் உண்டா? இல்லையா? உண்டு என்றால்

எனக்கு குருஸ்தானம் வகிக்கவேணுமே! இல்லாததினுல் தான் அந்த ஸ்தானத்தை வகிக்க வில்லை யென்றும், மறுபடியும் இவன் குருநாதன் தானு? போத குருநாதன்தானு? என்று கடிந்துபேசினுர். பக்கத்தில் நின்ற ஒரு தோட்டத்து ஆள் அசரீரி சொல்வது போல், ஆம் அதற்கென்ன சந்தேகம் என்றுன்.

அப்பொழுது சுவாமி வள்ளியம்மன் சந்நிதியில் இருக்க, நானும் அவருமாகத் திரும்பினேம், மார்க்கண்டு முதலியார் மடத்திற்கு எதிரே யாழ்பாணம் தியாகராஜப் பண்டிதரின் பஜனைக் கூட்டம், பஜனை செய்து கொண்டிருந்தார்கள். அங்கு போய் வருவோம் என்றேன். அவர் தடுத்தார். ஏன் என்றேன். அங்கு வந்தால் என்னைப்படிக்கச்சொல்வார்கள். ஆகையினுல்மாட்டேன் என்ருர். அப்பொழுதுதான், இவரும் படிக்கத்தெரிந்தவரென்று மதித்தேன். சந்நிதானத்திற்கு மறுபடியும், அழைத்துச் சென்றேன். ஒரு பண் படிக்கக் கேட்டேன். ஆசுகவிபோல் மூன்று செய்யுள்களில், ஸ்தலப் பெருமையையும், தான் வந்து சேர்ந்த சிறுமையையும்; விவரித்துக் கருத்துரைத்தார். பிறகு தேவாரப் பதிகம் ஒன்றும், கீர்த்தனை ஒன்றுஞ் சொல்லி முடித்தார் சுவாமி கோலுக்குச் சென்றுவிட்டது. நாங்கள் திரும்ப மடத்திற்கு வரும் வழியில், தியாகராஜ பண்டிதரின் பஜனைக் கூட்டம் எதிராக வருவதைக் கண்டோம். இராஜாசாமியின் பார்வையால் பக்தியும் சோகமும் துக்கமும் கொண்டுமனம்துடி துடிப்பவர்போல், உருக்கம் நிறைந்து தெரிந்தது. பஜனையிலுள்ளவர்களில் பலர், இராஜாசாமியைப் படிக்கச் சொல்லுங்கள் என்று என்னிடம் சொல்லிச் சொல்லச் சொன்ஞர்கள். நான் சொன்னேன். அதற்கு அவர், என் கருத்துநிறை பெறவில்லை, நான் நாளைக் காலையில்என் தேசம் போகிறவனுக்கு, இந்த இடத்தில் என்ன படிக்கிறது, எவனைப் பற்றிப் படிக்கிறது, இவனைப்பற்றி படிக்க எனக்கு இஷ்டமில்லை, நான் படிக்க மாட்டேன், என்னைத் தொந்தரவு செய்யாதீர்கள் என்று, அன்பும் விசுவாசமும் கொண்ட கோபத்தில், ஆவேசம் என்பது ததும்பச் சொன்ஞர். அப்படி அவர் சொன்னதின்கருத்தை, இதைப் படிப்பவர்களே தெரிந்து கொள்ளலாம்.

அதன்மேல் அவர்கைநிறையக் கற்கண்டு கொடுத்துபடிக்கத் தான் வேணுமென்று எல்லாருஞ் சொன்னேம். ஒப்புக்கொண்டு

பஜனைக்கூட்ட மத்தியில் சேர்ந்தார். திருக்கோவில் சந்நிதிக்கு எதிராக அரசமரத்தடியில் பஜனைக்கூட்டம் உட்கார்ந்தது. யாத்திரை வாசிகள் பலரும் உட்கார்ந்தார்கள். அமைதியாய் இருந்தார்கள். இராஜாசாமி படிக்கத் தொடங்கினர், படித்தார். அவர் படித்த பாட்டிலிருந்து, அவரது தெய்வ பக்தியும், விசுவாசமும் ஊக்கமும், விடாமுயற்சியும் தெற்றென விளங்கும்.

## பாட்டு

இராகம்—கேதார கௌளம் தாளம்—ரூபகம்.

பல்லவி.

ஏழை யென் முகம் பா ரையா—இவ்
வேளை வந்து கா ரையா பன் னிரு கையா
முருகையா; முருகையா (ஏ)

அநுபல்லவி

வாழை மா பலா—சூழ்கதிர் காமா
வளரும் பிறையச் சொற்படி-பித்து வாலிபமிப்பொற்கொடி
வனக் குறக் குலத் தினள்—திகிற் படத் திகைத் தனள்
வடி வழ குறு சிவ ஷண் முகா—வும தடி பணி பவள்
முன் வா (ஏ)

ஈராறு கண் களி ருந்துந் தி ருவுள்ளம்
ஏனோ யிந்தக் கள் ளம்—என்னைப்
பாராது விடுத்து நீயும் தள்ளலாமோ
பாவி பாழும் பள்ளம்
ஓராறு முகந்து லங்கும் புண்யா
உள்ளன்புடனுன் ஞாபக—மெள்ளத்தனை மறவாமலே
உனைக் கடைப் பிடித் தனன்—றனக் கருட்கொடுத்திடு
உத்தமதற்பரன் புத்திரா-யித்தின மிக்கணமுன்வா (ஏ)
பெற்றவர் பிள்ளையை பேதித்திடுவரோ
பின் வந்து குதித்திடு வீரோ—ஆனல்
பேசாத காதலியோடுற வாடிட
பெண்டுக் கிழுத்திடு வீரோ
உற்றவோருன் சொல்—லுகந்து ரைத்துச்செல்
உமதத்தையின் நற்புத்திரி—யினி தத்தனை யுஞ் சரிசரி
உடன் புறப்பட்டும் மயில் நட மிட்டுக் கொண்டும் வா
உம்பர்க்கதிபதிதேவா--நம்புஞ் சிறுபவள் முன்வா (ஏ)

என்ற இந்தப் பாட்டை இராகதாளமேளத்தோடும், சுப்ரமண்யக் கடவுளைச், சுட்டிக்காட்டி, சுட்டிக்காட்டி; பக்தியையும், விஸ் வாசத்தையும், எடுத்து எடுத்துச் சொல்லி, குய்யோ முறையோ வென்று அலறினர். [இந்தப்பாட்டு தன்னை நாயகியாகவும், சுப்ர மண்யக்கடவுளை நாயகனாகவும் படித்திருக்கின்றார்)

இந்தப் பாட்டைபடிக்கும்பொழுதே அங்கு உட்கார்ந்திருந்த யாத்திரை வாசிகள் மனதில், பக்தி என்பது குடிகொண்டது, விஸ் வாசம் நிறைந்து விட்டது; கடவுளிடத்தில் அன்பு மேலிட்டது. மனம் பக்தியிற் கவர்ந்து கொண்டது. இன்னும் கொஞ்ச நேரத் தில், முருகக் கடவுள் இந்தஇடத்திற்கு காட்சிதர வருவார் என்ற ஒரே மனத்தராய் கடவுளின் வருகையை எதிர்பார்த்த வண்ணமா யிருந்தார்கள்.

பின்னும் படிக்கத் தொடங்கினர்

இராகம்-இந்துஸ்தான் பியாக்-தாளம் ஆதி.

களபக் கூந்தல் வள்ளி தெய் வானையைக்
கனவிலு மறவாக் கதிரொளி முகனே
கண்டானந்தித்திட வந்தேனே—என்
கருத்தை யுணர்ந்து
கொண்டாண்டிட வேணுமுன் மைந்தனை—உன்னைக்
காணவே யாவலா யேதனி யாகினு
னோடியே நீயுறை மாவள மேநிறை
கதிர் காமக் கோவில் வந்தேனே—என்
கருத்தை யுணர்ந்து
எதிர் வா பன் னிரு கண் முருகோனே [களா]

இந்தப்பாட்டைப்படிக்கஆரம்பித்தபோதே, அவர் மனதிலே குடிகொண்டிருந்த முழுபக்தியும், வெளியிற் பரவி விட்டது. ஒவ் வொருவரும் பக்தி நிறைந்தவர்களாகி முருகபிரான் வருகையை எதிர்பார்த்தார்கள்.

**கதிர்காமக் கோவில் வந்தேனே,** என்று படித்த இடத்தில் ஒவ்வொருவரும் மெய்மறந்து விட்டார்கள்.

எதிர் வா பன்னிரு கண் முருகோனே. என்று அழைத்தவுடனே முருகக் கடவுள் திருக்கூட்டத்திற்கு முன்னேதிருக்கோலங் கொண்டார். அனைவரும், அன்பில் மூழ்கினார்கள். அரோ ஹரா! அரோ ஹரா!! அரோ ஹரா!!! என்று இடிமுழக்கம்போல் ஆரவாரமிட்டார்கள். ஆனந்தக் கண்ணீர் பெருகிற்று. அவரவர் மெய் மறந்தார். தன்னையறியாத நிலையிலிருந்தார். கொஞ்சநேரஞ்செல்ல, அவரவர் தன் நிலை தெரிந்தார்.

கருணைப்பெருங் கடலாகிய, கதிர்காமக் கடவுளின் பெருந் தன்மையும், காருண்யமும், அவரிடத்தே பக்தி விஸ்வாசங் கொண்ட, உள்ளன்பர்களின் விலாச நிறைவும், இதைப்படிப்பவர்களுக்கே நன்கு விளங்கும்.

அதுமாத்திரமல்ல, நானும் அவருமாக அடுத்த நாள் திங்கட் கிழமை பகல் இரண்டுமணி சுமாருக்கு கதிர்காம மிருந்து பிரயாணமானோம். திருவிழா முடிந்து போகவேணுமென்று, பலருங் கேட்டுக் கொண்டார்கள். வந்தகாரியம் நிறைபெற்றது. இனிதாமதித்தல் கூடாமையென கேட்டவர்களுக்கெல்லாம் சமாதானஞ் சொல்லி இராஜாசாமி புறப்பட்டு விட்டார்.

தசமராசெல்லும் வழிநெடுக, கதிர்காமப் பெருமையையும், அதன் மகிமையையும், எடுத்துப்பேசிக்கொண்டு வந்தோமே தவிர வேறுபேச்சுகளில்லை.

தண்ணீர்ப்பந்தலுக்கு சுமார் இரண்டுமெயிலுக்கு இப்பால் வந்தோம். இரண்யன் பிரகலாதனின் விவகாரம் நடந்தது. கடவுள் தூணிலும் இருப்பார், துரும்பிலும் இருப்பார், உன்னிலும் இருப்பார், என்னிலும்இருப்பார், எங்கும் இருப்பார் என்று பிரகலாதன் சொன்னவுடனே இரண்யனுக்கு அடங்காகோபம் பிறந்து இந்தத்தூணிலும் இருப்பாரா என்று இரண்யன் கேட்க, இந்தத் தூணிலும் இருப்பார் என்று, பக்திவிஸ்வாசம் நிறைந்தபக்தன், பிரகலாதன், அழுத்தமாய்ச்சொன்னான். சந்தேகத்தை நிவர்த்திக்கக் கடவுள் தூணில் இருந்தார். என்பதைப்பற்றி பேசிவரும்பொழுது; "தூணிலும் இருப்பார், துரும்பிலுமிருப்பார் எங்குமிருப்பார், இங்குமிருப்பார்" என்று இராஜாசாமியார் நடந்துபோகும் பொழுதே பாதையில் தனது வலதுகையை முன் நீட்டி "இங்கும் இருப்பார், இங்கும் இருப்பார்" என்று மனப்பற்றுதலாய்;பற்றுதல்மேல் அன்பும் பக்தியும் மேலிட்டு அழுத்தமாய்ச் சொன்னவுடனே

அம்மம்மா! பத்து கெஜ தூரத்தில் ஒரு பெருத்த தடித்த உருவம் எதிரில் தோன்றிற்று. அந்த உருவம் தனது தலையை அசைத்து அருட் பார்வையால் பார்த்து மறைந்தது.

ஆஹா! என்ன அதிசயம்! என்ன ஆச்சர்யம்!! என்ன பிரத்யேகக் கண்காட்சி!!! அம்மம்மா! என்னவென்று நான் சொல்வேன். எதைச் சொல்வேன், எதைச்சொல்லாமல் இருப்பேன். உரோமஞ் சிலிர்க்கின்றது. மெய், ஆனந்தக்கடலில் மூழ்கின்றது. அறிவு சொரூபமாய் நிற்கின்றதே.

தெய்வத்தினிடத்திலே கொண்ட,அன்பு, பக்தி, விஸ்வாசம்,சாந்தம் ஊக்கம், வைராக்கியம், இவற்றின்வழியினாலல்லவா, தெய்வத்தைநேரிடக் காண்கின்றோம். தெய்வஅம்சத்தைக் காண்கின்றோம். தெய்வப்பிரகாசத்தைக்காண்கின்றோம். தெய்வவிஸ்வாசத்தைப் பெறுகின்றோம். தெய்வப் பேறு பெறுகின்றோம். தெய்வ இகபரசாதகம் பெறுகின்றோம். தெய்வ சந்நிதானங்கட்கு நாம் புண்ணியஞ்செய்த ஆட்களாகின்றோம்.

ஆகையால் புண்ணியப் பேற்றினால் எடுத்த இந்த மானுடத்தேகம், இருப்பதற்குள் கதிர்காமப் பெருமானின் மக்களே! ஒவ்வொருவரும், அந்தக் கதிர்காமக்கடவுளை, பக்தி விஸ்வாசத்தோடு, ஒவ்வொரு நாளும், ஒரே மனதாய் தியானித்து பரஞ்சோதியாகிய அக்கடவுளிடமிருந்து இகபர சுகத்தைப்பெற்று மங்களமாய் வாழ்வீர்களாக. சுபம்,



உ

ஸ்ரீ குமரன்றுணை

# C. R.

# இராஜாசாமி பாடியது.

## மனம் ஒடுங்குதல்.

இராகம்-அடாணு, தாளம்-ரூபகம்.

பல்லவி.

மா ணிக்க கங்கைக்கரை வந் தான்
மனச் - சுற்றுத லுற்றுத லும்பினு
னக்கண மிக்கவ ருந்தினுன் (மா)

அனுபல்லவி.

கா ணிக் கைகப் பணமும் கை கட்டினவர்
கரை யிரு புர மவ ரிருக்க
நுரை பெரு கிட நதி பெருக்க (மா)

சரணம்.

நீ தாக முண்டா கிருக்கினி - லே யிந் நீரை
யே யெடுத்துண்ணப்
போ தே முன் செய் பாவம் போக்கும்
புத்தியுள்ள மாமனத்தே - விட்டிடுவா யாணவத்தை (மா)

## கதிர்காமத்தை வியந்து பேசினுரிடம் மறுத்தது.

(மாலை யொன்று கையில் என்ற மெட்டு)

சந்தப்பா.

இது வொரு - பொற்சொற் - கருடரு - மெட்டுக்
குடியொடு - சிக்கற் - குருசாமி
இக பர - பற்றற் - றெழுபழ - னிப்பற்
பலவுள - சொற்கத் - திருபூமி
இருக்க யிப்படி யெடுத்து ரைப்பது
விதிப்ப டிக்குள பொருத்த மற்றது
வுமக்கு யித்தல பெருக்கு பெற்றது
வெமக்கு மிப்பதி கிருக்கு தொட்டது (இ)

## பஜனையில் படிக்க மறுத்தது.



(என்மேலேனோ பழி சுமத்துறீர் 'என்றமெட்டு)

ஏனோ யென்கை பிடித்திழுப்பது (ஏ)

இட்டமுண்டில்லையேல் - கட்டஞ்செய்யாதேமேல் (ஏ)
இருக் கட்டுமக் கதைக் கட்டடுப்
படிக் கட்டினிற் கிடக் கட்டுமே (ஏ)

இவ னுனை பல தர மிருதய வுடன்வா
எழு திய மட லது—தெரி யாதோ
இது முறை யல வென பல ருரை இழி சொல
பழி யென இனி மொழி—சொரி யாதே

இழுப்பதுன்குல—வழிக்குளுற்றது
பழக்கமுற்றது—இழுக்கவிட்டது



## திந்தாஸ்துதி.



இராகம் - ஆரபி, தாளம் - ஆதி.

### பல்லவி.

நான் வணங்கும் சுப்ரமண்யனே
நம்புங் குகனே (நா)

### அநுபல்லவி.

என் வணக்கத் தேவையில்லை யென்று நீயுஞ் சொல் முருகா
நான் வணங்கா திருப்பேனோ தக்கணம் நீ முன்வருக (நா)

### சரணம்

வேடுவச்சி கேவலப்பெண் ணைசைப் பட்டு
வெட்கம் விட்டு வேடுருவ மாகிச் சென்ற
தென்ன ஞாயமோ—அந்த
வேடுருவ மாறிப் பின்னும் வேங்கை மரமாகி வளர்ந்
தோங்கி நின்ற தென்னவு—பாயமோ

கூடு கூட்டம் நம்பி மனம்
கொண்டானே மிகவுஞ் சினம்
நாடிக் கண்டான் வள்ளிமனம்
நாட்டி வைத்தா னுன்னைத்தினம் (நா)

காட்டில் தினை கார்த்தவள்மேல், காதல் கொள்ள லெவ்விதங்
காண வேணு மீதென்ன சாத்திரம்—கலகம்
மூட்டிவிட்டுப் போனவழி யேநடந்து போன அந்த
நாரதன்று னுன்றன் குலங் கோத்திரம்
மூட்டு சொல்லுக் காசைபட்டு
முன்தாரத்தை நோக விட்டு
கேட்டு வர வெளிப்பட்டு
கிட்டப் போனாய் தட்டு கெட்டு (நா)

—:—

## பக்தித்தொழுதல்.

இராகம்-கல்யாணி, தாளம்-ரூபகம்.

பல்லவி.

கதிர் காமக் குமரா நின் கருணை தாருமே
கதிபெற சரவணக் (க)

அநுபல்லவி.

மூதிர் கால மான பின் னே
முக நோக் கநே ரிடு மோ பின்
னக வேட் கை மா றிடுமே முன் [க]

சரணம்.

நீண்ட நாளாய் நினைத்து நினைத்து
நினைப்புங் கன வாகக் காணேன்
வேண்டதைத் தந் திடில் நான் கோணேன்
விக சித மயி லுட னிது தரி
விரை வினி லெழு நினை சதி பதி (க)
கால் நடக்கக் காச கலக்
கலைத்தது மொர் புறம் படுக்க
வேல் பிடித்த யே லழகா

விதி யெனு முறை சரி யலவே
அர கர வுரை பழு தலவே [க]

——::——

## கதிர்காமத்தாரோடு இரங்கல்

[அல்லி யென்னும் பெண்ணைக்கண்டு என்ற மெட்டு]
பஞ் சாட்சரப் பெருமை யாளா—பட்ட
பாடு போதும் பல நாளாய்—பட்ட
பாடு போதும் பல நாளாய்
பகர்ந்தேனிது கேளாய்
பரிந்து டனே வா ராய்
பன் னிருகை தோளா ஆளா [ப]

சஞ் சாரமான கொடுங் காடு—இதில்
தனித்த தற் கென்ன முறைப்பாடு—இதில்
தனித்த தற் கென்ன முறைப்பாடு
தர் திட் டேன் வீடு
தண் மனக் கூடு
தந்தனம் பாடு ஆடு [ப]

முக்கோண வீதி வழி சிரிக்க—அண்ணன்
முதுகு நோவ நீ இருக்க—அண்ணன்
முதுகு நோவ நீ இருக்க
முப்பணியு முடிக்க
முறைப் படிக்குச் சுமக்க
முது கிவ னுக் கிருக்க உருக்க [ப]

இக் காயங் கெட்டுப் போவ துண்டு—இதில்
இருப்ப தென் ன சொல் கண்டு—இதில்
இருப்ப தென் ன சொல் கண்டு
இப்புறம் வண்டு
இருக்குங் குழல் கண்டு
இருந்திடாதே கொண்டு கண்ட [ப]

## கதிர்காமத்தான்காட்சி.



ஸ்ரீ-ராகம், தாளம்—ஆதி.

பல்லவி

கண்டா னந்தங் கொண்ட னனே—கதிர்
கா மத் தலத்தி லே றிப் பழிக்கக் [க]

பல்லவி தொடர்

கருத் திருத் திருக் கிடப்-பிடித் திழுத் திடத் தொடக் [க]
கருமக் குழிபற் றகலக் கரைவிட் டயரக்-கடலுட்
பிறவிக் கிடமற் றிடக் [க]
கருவறுத்-தொருபுறத்-திருபிறப்-பிணிசெகத்
தறுமிகப்-பெருவழக்-கெனவிடுத்-திடபடித்-துக் [க]
கத்தி சுத்தி புத்தி நத்தி
பத்தி முத்தி சித்தி பெற்றிடக் [க]
காரண ணகிய நாரண மால்மரு
கோனவ ளுமயி லோடுட னடிடக் [க]

பல்லவி

உண்டோ யிதிலுஞ்சுக முண்டோ கமழவுங் கற்
கண்டோ கை நிறையக் கண்டோமே தரச் சொற்
கட்டி பிடித் தெனக் கிட்டது முத்தமே
பொட்டுக ளிட்டுப டித்தது சத்யமே
கல கல பல குல அர ஹர வென சொல
கன் தன குற மக ளவ ளுட னெதி ருறக் [க]



## திரும்பிவரும் வழியில் உருவக்காட்சி.



(கபா தாஹாத் வர்னமெட்டு)

ஈ தென்ன ரூபம்
இப் படி நிற்பது பாவம் [ஈ]

ஓதக்கதிர்— காமத்தானின்
சோதனைத்தான்—தோணக்காணுது [ஈ]

செப்பிடத்து ணிற்கு—டிப்புகு வாமெனை
செப்பிடச்செய்திசெ—விப்ரக லாதனன்
ஒப்பிடக் கேட்டதன்—னப்பனுக் கொப்பின

உளமன்பர்க் கன்பன்—மிகுபரி
பள மன்பர்க் கன்பன்—மனநில
வள மன்பர்க் கன்பன்—இருவரி
ஞள மன்பர்க் கன்பன்—அன்பன் [ஈ]



## கதிர்காமத் தலப்பெருமை.



சந்த விருத்தம்

த தத்தனன தத்தனன தத்தனன தந்தே
ப றப்பனன டப்பனப டைத்ததுவு பண்பே
பி றப்புடனி றப்பதுபி ரித்ததுபெ ரின்பே
சி றப்புடனி னைப்பதுதெ ளிப்பதுன லன்பே
கு றப்பெணவ னைப்புணரு மக்கதிர குன்றே
நி லப்பதிப ழச்கொடிநி திப்பொடியு மன்றே
க லப்படிப டித்தபழ னிப்பதியு மின்றே
ப லத்திடுதி ருத்தணியி ருப்பிடமு மொன்றே
த லப்பெருதி ருப்பதியு மக்கதிர குன்றே
உ ழைப்பெனப டிப்ப துவி டுப்பதுவு மென்னே
த ழைப்பதுப டுப்பதுந டப்பதுவு சொன்னே
பி ழைப்பதுகு டிப்பதும றப்பதுவு னன்னே
அ ழைப்பதுகொ டுப்பவனு மக்கதிர குன்றே

## நிந்தாஸ்துதி,



இராகம்-ஆரபி, தாளம்-ஆதி.

### பல்லவி.

உத்த மக்கு டிப்பி றப்பனோ - அல்லது
உத்தம சைவக் குலத்தானோ - வேணும்
உள்ளபடி கள்ளங்கப டுள்ளவனின் னுஞ் சொல்லவோ [உ]

### சரணம்.

ஓடெடுத்து பிச்சை வாங்க - ஓடவைத்த போது உதை
வாங்கினவன் - உந்த னப்ப - னல்லவோ - சுடு
காடடுத்துப் பேய்பிடித்தங் - காடிடவூரார்கள் வந்
தே யடித்த தென்னயிது - சொல்லவோ
கூடெடுத்த தோள் வலையன் - வீசி வலை மீன் பிடிப்பன்
கேடு கெட்ட வொட்டன் பிட்டுக் - காசைப்பட்டு
மண் சுமப்பன் (உ)

வேட்டையாடி மானிறைச்சி - வேகவைத்துத் தின்பவர் தன்
வீட்டினிலே பெண்ணெடுத்தல் - நல்லதோ - பின்
மாட்டிடையன் மாமன்பட்ட பாட்டனைத்துங் கேட்டிலையோ
நாட்டிலுள்ளோ - ருஞ்சிரிக்கச் - சொல்லவோ
வீட்டுக்கொரு குட்டுபட்டு - வெண்ணையைத் தின்ற
திருடன்
காட்டினிற் பெண்கள் தனிக்கக் காத்திருந்த
கண்குருடன் (உ)

காலுங் கையி ரண்டிருக்க - நாலு காலு டன்னொரு வாலு
ஆனைமுகச் சோதரனும் - அல்லவோ - அவன்
பால் குடித்த தெப்படியப் - பாவியைப் பெற்றதெப்படி
பாவஞ்சு மந்தான் குலமுஞ் - சொல்லவோ
பாலிடைச்சி - வேடுவச்சி - பச்சைகுத்தி - டும்பறச்சி
தோலுடுத்தி - சக்கிலிச்சி - வொட்டச்சி - யம்பட்டத்தி (உ)

உ

ஸ்ரீ குமரன் றுணை.

# கதிர்காம இரகசியம்
## என்னும்
# கதிர்காம யாத்திரைச் சுருக்கம்.



நீர்வள நிலவளஞ் சிறந்த, தஞ்சாவூர் ஜில்லாவைச்சார்ந்த இராஜமன்னார்குடிச் சுதேசன். C. R. இராஜாசாமி என்னும் பெயர் கொண்டவன். நித்திய கர்மானுஷ்டானத்தோடு அந்தரங்க பக்தியிற் பொலிந்தவன். வெளிப்படையாயிருந்து இந்தியாவில் பல சந்நிதானங்கட்கும் யாத்திரை சென்றவன். குருநாதனைப் பெற எண்ணங் கண்டவன். குருநாதனைத் தேடித் திரிந்தவன். ஓடி ஓடித் தேடினவன். பாடிப் பாடித் தேடினவன். எடுத்த விரதத்தில் வைராக்கியன். விடாமுயற்சியில் விவேகன். திடச் சித்தன். பல ஸ்தலங்கள் சென்றும் குருநாதனைக் காணாது களைத்தவன், தன் வீட்டில் அங்கலாய்க்கின்றான், அழுகின்றான். "ஆசை மிகக்கொண்டு வேட்கமாகி நின்றேனே" என்னும் பாட்டைப் படிக்கின்றான், படுக்கின்றான், மெய்மறக்கின்றான். கதிர்காமயாத்திரையில் கலக்கின்றான்.

அந்தோ! பாவம் என் செய்வான். இராஜாசாமி ஒருகாசும் இல்லாமலே, யாத்திரையானான். நான்கு மயில்கள் நடந்தான். திருபாலக்குடியென வழங்கும் பள்ளக்குடி வந்தான். நேரம் பகல் 12மணி கொடும் வெயில். அங்குள்ள கோவிலைக் கண்டான். கோவில் தொண்டனோடு கலந்தான். தயிர் மோர்தர அருந்தினான். கதிர்காமஞ் செல்வதாகச் சொன்னான். அணா எட்டு தரப்பெற்றான்.

கொடுங்கானில் நடந்தான், சூரிய வெப்பந்தாங்காது களைத்தான். மேல்முழுதும் வியர்வையால் வருந்தினான். பதினாறு மயில் நடந்தான். இரவு 7 மணி சுமாருக்கு பட்டுக்கோட்டை என்னும் ஊர் சேர்ந்தான். நாலணா தந்து ஆகாரங்கொண்டான்.

ரயில்வே ஸ்டேஷனில் கடப்பைக்கல்லில், அதிகக் குளிரில் சயனித்தான். தூங்கிலன், கதிர்காமம் நினைக்கின்றான், கண்ணீர் சொரிகின்றான், அயர்ந்தான், அதிகாலையில் எழுந்தான், மூன்றுமயில் நடந்தான், கோட்டாகுடி வந்தான். பிராசுதாரைக் கண்டான். காபி பலகாரம் ஆகாரம் அருந்தி அன்றிரவு அங்கு தங்கினான். மறுநாள் எழுந்துஇரண்டு ரூபாய் பெற்று நாலுமயில் தூரமுள்ள பண்ணைவயல் ரயில்வே ஸ்டேஷன் சேர்ந்தான். அறந்தாங்கிக்கு டிக்கட்டு வாங்கினான், பிற்பகல் 5-மணிக்கு ஊர் புகுந்தான், அன்றிரவு தங்கினான். இரவு முழுதுங் கதிர்காமத்தை நினைத்தான். மறுநாட் காலையில் எழுந்தான், ஒன்பது மயில் நடந்து திருப்பெருந்துறையைச் சேர்ந்தான். திருப்பிரசாதம் வாங்கியுட்கொண்டான், இரவு தங்கினான். ஆகாரத்திற்குக் காசில்லாமல் கோவில் பிரசாதத்திற்கு சீட்டுவாங்கி இரவு பத்துமணிக்குப் பிரசாதங் கிடைக்க உண்டு, சந்நிதான முன்வாயலில் படுத்துக்கொண்டான். நித்திரையில்லாது வருந்திவருந்தி கதிர்காமத்தை நினைத்து நினைத்து உருகினான். பொழுதுவிடிய எழுந்து கையில் ஒரு அணுவோடு, கருவை முட்காட்டு வழியாக, உக்ரமான வெயிலில் பாதங்களில் அனேக முட்கள் தைக்க மிக்க கஷ்டப்பட்டு,செட்டிநகர், ஏம்பல் என்னும் ஊருக்கு இரண்டு மணிக்குச் சேர்ந்தான். அழகான கோவிலைக் கண்டான். கோவில் அதிகாரியைக் கண்டு தான் கதிர்காம யாத்திரைவாசியென்றும், கையில் ஒரு அணுதான் இருக்கிறது, அதிகப் பசியாயிருக்கிறதென்றும் சொன்னான். கோவில் அதிகாரி அன்பிலாது தந்த சர்க்கரைப் பொங்கலை வாங்கிக்கொண்டு, அங்குள்ள தடாகத்தினருகே பிட்டு வாயிற் போட்டுக்கொண்டு, நடந்த களையால் படுத்து இளைப்பாறினான். இரவும் அங்கேயே தங்கினான். ஆகாரமோ இல்லை. தனியாகப்படுத்துக்கொண்டு கதிர்காமத்தை நினைத்துநினைத்து தூங்கினான். மறுநாட் காலையில் நடந்தான். வழிதெரியாமல் தியங்கி பிற்பகல் ஒருமணி சுமாருக்கு தேவகோட்டைக்கு வந்தான். பத்துமயில் நடந்த இளைப்பும், பசிக்களைப்பும் அதிகமானன். சத்திரத்தில் போய் சாதங்கேட்டான். சத்திரத்து மணியகாரர், சூத்திரனுக்குச் சாப்பாடு தருவதில்லை, பிராமணனுக்கு மட்டுந்தான் என்று சொன்னதைக் கேட்டான். பசியோ அதிகம், களையோ அதிகம்.

நடக்கவோ பிரயாசம் சத்தரத்திலிருந்து ஊருக்குள் வந்தான். ஜமீன் என்கிற காட்டுக்கோட்டை செட்டி வீட்டில் பல அடியார்கள் கும்பலாய் நிற்கிறதைக் கண்டான். என்னவென்று விசாரித்தான். யாசகந்தருவதாகத் தெரிந்தான். அங்கு சென்றான். தான் வந்ததையும், பசிக்கொடுமையையும் சொன்னான். சோ. ம. வீட்டில் முதல் வாங்கவேணும் என்னும் பதிலைக் கேட்டான். ஆவலுடன் சோ. ம. வீட்டிற்கு வந்தான். விஷயத்தைச் சொன்னான். ஜமீன் செட்டியார் வீட்டில்தான் முதலில் வாங்கவேணும் அங்குபோய் யிங்குவா என்று சொன்னதைக்கேட்டான், திரும்ப ஜமீன் வீட்டிற்கு வந்தான். அங்கு போய்த்தான் இங்கு வரவேணும் என்று சொல்ல மயங்கினான். திரும்ப இங்கு வந்தான். திரும்ப அங்கு சென்றான், காரியம் நடவாதலால் கலங்கினான். ஆத்தரங்கொண்டான். உடனே அங்குபோய் இங்குவா, இங்கு போய் அங்குவா என்கிறன் செட்டி மகன், என்னே! எங்கு போய் நிற்பன் இவன். என்பதாகத் தன்னை மறந்து சொல்லிப் புறப்பட்டான். சத்தரம் வந்தான், படுத்தான், களையால் உறங்கினான். தன்னோடு பல சாதுக்களும் உறங்கினார்கள். இரவு பத்துமணிக்கு மேல், எழுந்திருங்கள், எழுந்திருங்கள் என்று கேட்ட சப்தத்தால் விழித்தான். கல்லும் நொய்யுமாய், வெந்தும் வேகாத சோற்றில் மிச்சம் மீதியிருந்த கறி குழம்பை கலந்து பிசைந்து ஒவ்வொரு உருண்டை உருட்டி ஒவ்வொருவருக்காகக் கொடுத்துத் தனக்கும் கொடுக்க அதைவாங்கி ஆவலோடு உண்ணுவதற்கு, குளக்கரைக்குச் சென்று ஒரு கவளம் வாயிலிட, கல்லைக்கடித்தானே யல்லாது, சாதத்தைக் காணும் கல்லுகளை மென்றதில் பற்களெல்லாம் நெற நெறவென்று ஆயிற்று அந்த சாதத்தை அப்படியே வைத்து விட்டு, கொஞ்சம் தண்ணீர் சாப்பிட்டு விட்டு, மறுநாள் காலையில் எழுந்து நடந்தான். ஆறுவயல் என்கிற ஊர் வந்தான். வெயில் அதிகம். ஆகாரமில்லை. என் செய்வான். யாரையுங்கேட்க மனதில்லாதவனாய் இருந்தான் பிள்ளையார் கோவிலில் படுத்து கதிர்காமத்தை நினைத்து வருந்தினான் உச்சிகாலம், கோவில் பிரசாதம் வாங்கிவந்து ஒருவர் தா சாப்பிட்டு விட்டு, தூங்கிவிட்டான். பிற்பகல் எழுந்து நடந்தான். காரக்குடி, வந்து அங்கு தங்காமலே குன்றக்குடி, என்னும் ஸ்தலத்திற்கு இரவு எட்டு மணிக்கு வந்து சேர்ந்தான். ஸ்தலத்

தில் பாக்கள் படித்தான், மேலமடஞ்சென்றான், சுபகாரிய மடத்தார் தந்த ஆகாரத்தைக் கொண்டான். காலையில் எழுந்து திருக்கோவில் வலம் வந்து பாக்கள் பாடி, நடந்தான். பகல் பன்னிரண்டு மணி குன்றக்குடிக்குங்கோனுப்பட்டுக்கும் இடையே புழுதிமணல், கொடும் வெய்யலினால் மணல் கொதிக்கின்றது அதில் நடக்கின்றான், இரண்டுமயில் நடந்தான், பாதங்கள் கொப்பளித்துப் போயிற்று, கால்நடக்க முடியவில்லை, தள்ளாடித்தள்ளாடி தீபப்பொழுதுக்குக் கோனுப்பட்டுவந்தான். ஆகாரமோகிடையாது, சிவன்கோவிலில் படுத்துக்கொண்டான். கனத்தமழை பெய்தது. பொழுதுவிடிய கீழச்சிவற்பட்டிக்கும் நடந்தான்.நான்கு மயில்தான். புண்ணாகிய பாதத்தோடு காலையில் எழுந்தவன் நடக்கவேமுடியாமல் பசிக்களை தலைக்கேறி தலைச்சுழல, பில்லமங்கலம் சத்தரம் வந்து, கதிர்காமச் சிந்தனை, பசிக்களையால் புத்திதடுமாறி, சாய்ப்பு நாற்காலியில் உட்கார்ந்திருந்த சத்தரத்து மணியக்காரரிடம் அதிக தாகமாயிருக்கிறது, கொஞ்சம் மோர் தந்தால் நன்றாயிருக்குமென்று கேட்டான். என்மடியிலா மோர் வைத்திருக்கின்றேன், கேட்டு வாங்கிக்குடி போ என்று கடிந்த வார்த்தையைக் கேட்டான். கலங்கினான். சத்தரத்து அடுத்த திண்ணையில் உட்கார்ந்தான். உள்ளேயிருந்து வெளியேவந்த சுயம்பாகி ஐயரைச் சந்தித்தான், வந்தவர் உற்றுப்பார்த்து, உன்ஊர் மன்னார்குடியல்லவா? உன்பேர் C. R. அல்லவா? இதுஎன்னகோலம், இதுஎன்ன இப்படிவந்தது என்று கேட்க முதலில் கொஞ்சம் மோர் தந்தால் சாப்பிட்டதன் மேல் பதில் சொல்கிறேன் என்றவுடன் மோர் கொண்டுவந்து தந்ததைச் சாப்பிட்டு இளைப்பாறினான். வந்த வரலாற்றைச் சொன்னான். சத்தரத்து சுயம்பாகி மிகவும் ஆதரித்து பகல் சாப்பாடு கொடுத்து இரவு சாப்பாடுங் கொடுக்க களைதவிர்த்து கதிர்காமச் சிந்தனையைத் தவிர வேறு நினைவு இல்லாதவனைச் சிந்தித்தான். கையிலோ காசுமில்லை, கதிர்காமமோ செல்லவேணும், இருக்கும் இடமோ தெரியாது, எப்படிப்போய்ச் சேர்வது, கதிர்காமப்பெருமானே! எல்லாம் உன்திருவருள் என்று யோசிக்கலானான்.

சத்தரத்தில் பல சாதுக்கள் கூடிக் கூடிப் பேசுகிறார்கள். என்ன பேசுகிறார்கள். கீழச்சிவற்பட்டி பெரிய தேனப்ப செட்டியார் எனக்கு இரண்டணா சீட்டு கொடுத்தார். எனக்கு ஒரு அணா

சீட்டுக் கொடுத்தார். எனக்கு பத்தணு வசூலாயிற்று. எனக்கு எட்டணு வசூலாயிற்று. நாளைக்கு அந்த செட்டியாரைப் பார்க்க வேணும். நாளைக்கு இந்த செட்டியாரைப் பார்க்க வேணும். இன்னும் வசூலாகும் என்று ஒருவர்க்கொருவர் பேசிக்கொள்ளும் வார்த்தையைக் கேட்டான். ஆனால் நமக்கும் ஏதாவது அந்த கதிர்காமப் பெருமான், திருவருளால் கிடைக்கும் என்று நினைத்தான்.

மறுநாள் அரைமயில் தூரத்திலுள்ள கீழச்சீவற்பட்டி வந்தான். அரசமரத்தடியில் அனேக சாதுக்கள், கூடியிருந்தனர். எல்லாரும் பெரிய தேனப்பசெட்டியார் வீட்டிற்குச் சென்றார்கள். கூடவே சென்றான். அங்கு கூட்டம் அதிகம். இந்தக்கூட்டத்தில் நமக்கு என்ன கிடைக்கப் போகின்றது. என்று யோசித்தான் தேனப்பசெட்டியார் வந்தார். அவர் பாட்டுக்கு வந்தார் அவர் பாட்டுக்குச் சென்று விட்டார். பகல் பத்துமணி எல்லா சாதுக்களும், இனி தேனப்பசெட்டியார் சாப்பாட்டுக்கு மேல்தான் வருவார் நாம் எல்லோரும் மடத்தில் போய் சாப்பிட்டு அதற்கு மேல் வருவோம் என்று புறப்பட்ட சாதுக்களோடு சாதுமடத்திற்குப் புறப்பட்டான்.

சாதுக்கள் மடத்தில் காலையில் சீட்டு வாங்கினவர்களுக்குத் தான் ஆகாரம். சீட்டு வாங்கவில்லையே யென்று திகைத்தான் மடத்தில் மணி அடித்தார்கள். சாதுக்கள் உள்ளே சென்றார்கள். சீட்டு இல்லாததினால் வெளியில் நின்றுவிட்டான். சிறிதுகழிய சாதுக்கள் மடத்து மணியக்காரரைக் கண்டுபேச, ஆகாரம் கொடுக்கும் சமையற்காரருக்கு உத்தரவு செய்ய வயிறு நிறைய சாப்பிட்டு, மடம் வெளிப்பக்கத்தில் உட்கார்ந்தான். கதிர்காமப்பெருமானை நினைத்தான்.

மாலை மணி நான்கு இருக்கலாம். தேனப்பசெட்டியார் வீட்டிற்குப் புறப்பட்டான். அங்கு ஒருவருமில்லை. தேனப்பசெட்டியாரைச் சந்தித்தான். நீங்கள் எல்லாம் என்வந்தீர்கள், உங்களுக்கு நாங்கள் என்ன செய்கிறது. நாங்கள் இங்குவரும் சாதுகளுக்கு காலணு அரை அணு கொடுக்கிறது. நீங்கள் நல்லவர்களாகக் காண்கிறீர்கள். ஆகையால் ஒரு அணுவுக்குச் சீட்டு தருவேன்

என்று சொன்னதும் எல்லாம் அவடத்திய அபிப்பிராயம் என்ருன். ஆனல் இரண்டணுவுக்குத் தருகிறேன் ஆனல் நாலணுவுக்குத் தருகிறேன் என்று ஒருசீட்டு எழுதி சீட்டையும் நாலணுவையும் தரப் பெற்று சந்தோஷித்து திரும்பினன்

சாதுக்கள்மடம், சேர்ந்தான், வருந்துகிருன், வாடுகிருன்- இந்த நாலணுவில், கதிர்காமம் எப்படிப்போய் சேர்வதென்று அழுகிருன்.

பிறகு—காடுநிறை யானைபுலி யோடுலவு சூழுகதிர்
காமமிட மாகவுள போதகுரு நாதா-

என்கிற சந்த விருத்தம் பாடிப் புலம்பினன். ஒரு பிராமண வயோதிகர், ஆற்றுதல் செய்யத்தேறினன். என். கிட்டு ஐயரைக் கண்டான், தன்குறைகளையும், ஆவலையும், சொன்னன்- அதற்கென்ன, இருக்கட்டும், நாளை தேனப்ப செட்டியாரைப் போய் பார்க்கலாம் என்றுசொல்ல ஐயோ இன்று போய் பார்த்து, சீட்டும் நாலணுவும், வாங்கிவந்துவிட்டேன், நாளை எப்படிப்போய் பார்க்கிறது, என்ருன். பரவாயில்லை, நாளைபோய் பார்க்கலாமென்று, சொல்லிவிட்டு காலையில் வருகிறேன் என்று, வீட்டிற்கு சென்றதும், பல பல யோசித்தான்.

இரவு சுமார் பனிரண்டுமணிக்கு ஒரு தோற்றம், தேனப்ப செட்டியார்பிள்ளை, அழகப்ப செட்டியாரைக் குறித்து ஆயிரத் தலைப்படத்தன், என்ற வண்ணத்தை, எழுதினன் காலையில், கிட்டு ஐயரைச்சந்தித்தான். இரண்டுபேருமாக, வண்ணத்தைக் கையிற் கொண்டு, நடந்து அழகப்ப செட்டியாரைச் சந்தித்து எழுதிவந்த வண்ணத்தைப் பாடினன்.

அழகப்பசெட்டியார் கேட்டதும், பெட்டி சாவி வீட்டில் இருக்கிறது, போய் எடுத்து வந்து, சீட்டு அனுப்புகிறேன்சுவாமி நீங்கள் இனி இங்குவரவேண்டாம், மடத்தில் போயிருங்கள் என்று சொன்னதைக்கேட்டு, மடத்திற்கு திரும்பினன். மடத்திலிருக்கின்ருன்

வண்ணத்தில் கேட்டபடி.ஐந்துரூபாய்க்கு, எழுதிதந்தசீட்டு ஒன்றை, கிட்டுஐயர் கொண்டுவந்துதந்ததை, வாங்கிதன்கண்களில் ஒற்றி, முத்தமிட்டு கதிர்காமப் பெருமானின், திருவருள் என்று

ஆனந்தக்கூத்தாடினான். இரண்டு மூன்றுநாள்வரை கிட்டு ஐயரும் கூடயிருந்து சுமார் முப்பத்தி ஐந்து ரூபாய்வரையில் வசூலித்துத் தர, வாங்கிக்கொண்டு கதிர்காமப் பெருமானை மனதில் தியானித்து கொண்டே புறப்பட்டான்.

அட்டமா சித்தி பட்டமங்கலம் வந்தான், கையில் நிறையப் பணமிருந்தும், நயினப்பன் கரும்பீசன், சந்நி தானத்திற்குள் நுழைந்து, சந்நிதானத்திற்குரியார், வீ. சொ. ராம. காசி செட்டியாரைச்சந்தித்து, பசிக்கிறது, ஆகாரம் சாப்பிட வேணுமென்று சொன்னான், பனிரண்டணு தந்ததை வாங்கிக்கொண்டு புறப்பட்டான்.

மோட்டாரில் மானமதுரை வந்தான். மண்டபம் கேம்புக்கு டிக்கட்டு வாங்கி, கேம்பில் போய்ச் சேர்ந்தான். எல்லாரும் பாஸ் பதிவு செய்தார்கள். பாஸ் இல்லாததால் ஏங்கினான். டாக்டர் சீட்டு கொடுக்கப்பெற்று கொழும்பு கோட்டைக்கு வந்தான் இதற்குள் கையில் இரண்டு மூன்று ரூபாய் தவிர, எல்லாம் செலவு செய்து விட்டான்.

கோட்டைக்கு எதிர் பிராமணாள் காபி கிளப்பில் சாப்பிட்டு விட்டு, கோட்டை ரயில்வே ஸ்டேஷனில் வந்து, உட்கார்ந்தான், கையில் பணம் இல்லையே, எப்படி கதிர்காமம் போய் சேர்வது என்று கலங்கினான். அந்நேரம் அங்கு; ஒருசாதுமகானைக்கண்டான் சம்பாஷித்தான். அவரும்கதிர்காமம் நடந்து போவதாய்ச்சொல்ல துணைப்பற்றினான், துணையோடு நடந்தான்.

மொறட் என்கிற ஊரில், சோடா வியாபாரஞ் செய்துள்ள மனிதன், இரண்டுபேருக்கும் அன்றிரவுசுகபோஜனஞ் செய்வித்து கையில் ஒரு ரூபாயும் தர வாங்கி சந்தோஷித்தான். துணையோடு நடந்தான், பொழுது விடிய நடக்கிறதும், பொழுது முடிய ஒரு இடத்தில் தங்குகிறதுமாக நடந்தான்.

அம்பலாங் கோடையில், கதிர்காம யாத்திரை வாசிகளை அன்பாய் உபசரிக்க அங்கு ஒருநாள் தங்கி அவர்கள் தந்தமூன்று ரூபாயையும் பெற்று நடந்தான்.

காலிசேர்ந்தான். செட்டி நகரவிடுதியில் முதலில் தருமிடத்தில் எட்டணாவுக்கு சீட்டு கிடைத்தது. இரண்டணாவும் நாலணாவுமாக இரண்டரை ரூபாய் கிடைத்தது. நடந்தான்.

ஆக நடந்துநடந்து தங்கிதங்கி மாத்திரை வந்தான். கதிர்காம மடத்தில் ஒரு இரவு ஒரு முற்பகல் இருந்து, மடத்தின் அன்பான உபசரிப்பைப் பெற்று புறப்பட்டான் கையில்மூன்றுநான்கு சதம் தான் இருந்தது. துணையையும் விடாமலே புறப்பட்டான்

திக்வலையில், சுருட்டு வியாபாரஞ் செய்யும், யாழ்ப்பாணம் சைவப் பிள்ளை ஒருவர் வீட்டில் அன்றிரவு, அறுசுவையோடு அன்னமிட உண்டு மகிழ்ந்தான். காலையில் எழுந்து நடந்தான். தங்காலையில் உபசரித்த யாழ்ப்பாணத்தார் வீட்டில், ஆகாரமுண்டு புறப்பட்டான். நடந்தான். அங்கு அங்கு தங்கி தங்கி வளையலாற்றைச் சேர்ந்தான். துணை மனிதன் இதில்ஸ்நானஞ் செய்யச் சொல்ல ஸ்நானஞ்செய்தான்.

வளையலார் சமீபம் ஒரு ஊர். நேரம் பகல் மணி ஒன்று. ஸ்நானஞ் செய்ததும் கொடும் பசி. கதிர்காம யாத்திரை வாசிகளுக்கு அன்னமிடும் யாழ்ப்பாணத்தார் வீடுண்டா என்று கேட்டான். தங்காலையோடு முடிந்தது என்று சொல்ல வியர்த்தான். கூடவந்த பெரியார் பசிக்களையால் படுத்துக் கொண்டார். என் செய்வான்.

கொழும்பிலிருந்து நடந்து நடந்து கால் பாதங்கள் தேய்ந்து, எரிச்சலாகிறது. கற்கள் பதித்த குழிகள் பாதத்தில் வாதிக்கிறது. இருதுடைகள் அசைக்க முடியவில்லை. கால் வீங்கிவிட்டது. பசிக்களையால் பாதவிக்கிறான்.

அங்குள்ள தேத்தண்ணீர் கடையில் நிற்கிறான். ஒரு மோட்டார்பஸ் வந்தது. தன்னையும் பெரியாரையும் ஏற்றிப்போகும்படி வேண்டினான். பஸ்காரன் மறுத்துச்சொன்னான். கவலைப்படுகிறான். கதிர்காமப்பெருமானை நினைத்து நினைத்து கண்ணீர் விடுகிறான். கதிர்காமக்குமரா என்கிற பாட்டைப் படித்து படித்து அலறுகிறான்.

சத்தங்கேட்டான், ஒரு புதுமோட்டார் வரக்கண்டான். இருவரையும் அதில் ஏற்றிக்கொள்ள, மாலை சுமார் நாலுமணிக்கு தசமாரமி வந்தான். ஆலமரத்துச் சுவாமி ஆஸ்ரமத்தில் தங்கினான். அன்றிரவு கழித்தான்

அடுத்த நாள் காலையில் கதிர்காமம் புறப்பட்டான். பத்துமணி சுமாருக்கு மாணிக்க கங்கை வந்தான். "மாணிக்க கங்கைக்கரை" என்ற பாட்டை படித்து மனங்கலங்கினான். ஸ்நானஞ்செய்து விட்டு, மார்க்

கண்டு முதலியாரின் திருமடத்தை சேர்ந்தான். சாதுக்கள் இலைபோட்டு பந்தி உட்கார்ந்திருக்கிறார்கள். துணையோடு இரண்டு இலை போட்டு இலை எடுத்துக் கொண்டு அந்த கும்பலில் ஒரு மூலையில் உட்கார்ந்தான். மடத்துக் கணக்கப்பிள்ளை அறிவு கெட்ட ஆத்துமாக்களே அறிவு இல்லாமல் இப்படி உட்கார்ந்தீர்களேயென்று கையைப்பிடித்து இழுத்து தள்ளிவிட வெளியில் வந்து அதிகக் கவலையுற்றான்.

சாதுக்கள் உண்டு எழுந்து போகும் வரையில், நின்றுகொண்டிருந்தான். இங்கு யாரும் நிற்கக்கூடாது. சாப்பாடு இனிமேல் கிடையாது. இங்கு ஒரு பந்திதான் வைக்கிறது என்று சொல்லி போங்கள் போங்கள் என்று சொன்னதும், மடத்துவாயிலில் நின்று, சந்நிதானத்தைப் பார்த்தான். மடத்து கணக்கு பிள்ளை அழைத்து அன்னம் பரிமாற உண்டு இளைப்பாறினன்.

வந்து இரண்டு நாள்வரை ஒன்றையுங்காணாமே என்று வருந்தி வருந்தி துக்கசாகரத்தில் மூழ்கினன். புலம்ப ஆரம்பித்தான். தயங்குகிறான். தவிக்கின்றான். தத்தளிக்கிறான்.

மார்க்கண்டு முதலியார் மடத்தின் ஓர் மூலையில் உட்கார்ந்திருக்கின்றான். கொழும்பு வெள்ளவத்தையிலிருந்து வரும் தம்பிராசாவை சந்திக்கிறான். சுவாமிகள் எந்த ஊர் என்று கேட்க, வரலாற்றை தெரிவிக்கிறான். விட்டுப்பிரிகிறான்.

மனதில் வருந்துகிறான். நாடிவந்த கருத்துக்கு என்னவழி யென்கிறன். பழி போடுவேன் என்கிறான். குருநாதன் இந்த இடத்தில் இருக்கின்றான இல்லையா யென்கிறான். கருத்து நிறை பெறச்செய் என்கிறான். குருஸ்தானம் வகித்துக்கொள் என்கிறான். தெய்வானையம்மன் சந்நிதானஞ் செல்கிறான். வந்த காரியத்தை நிறை பெறச்செய் என்று முறையிடுகிறான். வள்ளியம்மன் சந்நிதானம் செல், காரியம் சித்தியெனத் தெரிந்து ஆனந்திக்கிறான். வள்ளியம்மன் சந்நிதானம் வருகிறான், வருந்துகின்றான்.

மாணிக்கக் கங்கையில் ஸ்நானஞ் செய்து, மார்க்கண்டு முதலியார் மடத்தில் நிற்கிறான். தம்பிராசா அழைக்க கூடவே செல்கிறான். தம்பிராசா தன்னைமறந்து சொல்வதையெல்லாம் அமைதியாய்க்கேட்டு ஆனந்திக்கிறான். தூதனுக அனுப்பினை வென்று கேட்கிறான்.

வள்ளியம்மன் சந்நிதானஞ் செல்கிறான். வருந்துகிறான். முறையிடுகிறான். கருத்து நிறைபெறும் என்று கருதுகிறான். கண்ணீர் ததும்ப அழுகிறான்.

சந்நிதானத்திற்கு வருகிறான். வந்தகாரியம் முடியவில்லை. வந்த விதம் கொண்டுபோய் சுதேசம் சேர்த்துவிடு என்கிறான். கும்பலில் காது கேட்க வில்லையோ என்கிறான், ஏன் பயந்து கொண்டு உள்ளே இருக்கிறாய் என்கிறான். அடைத்துவைத்தது யார் சொல்; அதம்பண்ணுகிறேன் என்கிறான். பூட்டை உடைப்பேன் என்கிறான். சண்டைக்கு நிற்கிறான்

மறுபடியுஞ் சந்நிதானஞ் செல்கிறான். ஊருக்குப்போக பிரயாணஞ் சொல்லிக் கொள்கிறான். திரும்புகிறான். அகஸ்மாத்தாய் அந்தக் கும்பலில் தம்பிராசா கைபிடிக்கவாயில்வந்தபடி ஏசுகிறான் பிடித்தபிடி விடாத தம்பிராசாவோடு முக்கோண வீதியாக வள்ளியம்மன் சந்நிதானம் வருகிறான். நிற்கிறான். வருந்துகின்றான். கேள்வி கேட்கிறான். வள்ளியம்மன் அருள்படி தம்பிராசாவோடு சந்நிதானம் வருகிறான். பண்படிக்கின்றான். பாதவிக்கின்றான்.

மார்க்கண்டு முதலியார் மடம் திரும்பினான்; தியாகராஜா பண்டிதர் பஜனையில் படிக்கக் கேட்டும் மறுக்கிறான், கண்டபடி கோபித்துக் கொள்கிறான். சமாதானஞ் செய்ய அரசமரத்தடியில் சந்நிதானத்தின் முன் உட்கார்ந்தான். பஜனை நடக்கிறது ஆயிரக் கணக்கான யாத்திரைவாசிகள் கவனிக்கிறார்கள். படிக்கிறான். அலறுகிறான். அழுகிறான். அந்தரமாய் நிற்கிறான். சுந்தரப் பிரகாசத்தைக் காண்கிறான். நெருங்குகிறான். புறம் நிற்கிறான், பயந் தெளிகிறான். சோதியைக் கண்டான். மெய் மறந்தான். சொரூபம் காண்போமெனத் திடங்கொண்டான்.

அரோஹரா அரோஹரா அரோஹரா அரோஹரா

அடுத்த நாளே தூதனோடு பிரயாணப் பட்டான். வழியில் கருத்திற்கடங்கா சொரூபத்தைக் கண்டான். கொழும்பு வெள்ளவத்தை திருக்குறட் பயிற்சிக் கழகத்தில் தாமதித்தான்.

சொரூபங்காண ஆவல் கொண்டான். என்று வாய்க்குமோவென ஏக்கங் கொண்டான். ஏங்கித் தயங்கினான். தூதனோடு யாழ்ப்பாணஞ் சென்றான்.

தூதனும் தானுமாக கொழும்புத்துறை ஞானயோஹரைக்கண்டான். எந்த ஊர் என? இராஜமன்னார்குடி என்றான். அல்ல

என்றவுடனே, ஆத்திரங்கொண்டான். விழித்துப் பார்க்க திடச் சித்தனாய் நின்றான். பாட்டுப் படிக்கக் கேட்க "பஞ்சாட்சரப் பெருமையாளர" என்ற பாட்டை முழுதும் படித்தான். குரங்குப் பிடியன், என்கிற பட்டமும் மாம்பழமும் பெற்றான். நல்லூர் திருப்பினான்.

ஒரு இடத்தில் தனித்தான். சொரூபத்தைச் சந்தித்தான். சுமக்க முடியுமா என்று கேட்க, சுமப்பேன் என்றான். பார்ப்போம் என்றவுடனே, தலை குனிந்து சுமந்தான். இரு துடையாலும் கண்டத்தை நெருக்க வருந்தினான். அப்பொழுதே சொரூபத்தின் உந்தியை புறமுதுகைச்சுற்றி கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டான். கை நகங்கள் அழுத்த உந்தியை இறுக்கிப் பிடித்ததில் வயிறு வலிக்கிறது மலங்கழிக்க வேணும், பிடியை விடுயென, விடாமல் வாதித்தான். அபிஷேகம் பெற்றான்.

வீதி வழி நடந்தான் விசாலமான பெரும் வெள்ளக்காடாயுள்ள ஆற்றைக் கண்டான். ஆற்றைக் கடக்க துணையை விட்டுவிட்டான். ஆற்றின் கரையிலே நின்று அழுதான். துணையைச் சந்தித்தான். சமாதானம் பெற்றான். வண்டி வைத்துக்கொண்டு இந்த வழிவா, என்னுஞ் சொல்லைக் கேட்டான்: ஒரு கடைக்கு அழைத்தேகச் சென்றான். வண்டிச் செலவிற்குப் பெட்டியைத் திறக்கப் பார்த்தான். அதில் சில்லறையாயிருந்தது. தம்பதி, தெரிசனங் கண்டான். ஒரு ரூபாய் வெள்ளிப்பணம் தரப் பெற்றான். இந்தியாவிற்குப் பிரயாணமானான்.

கீழச்சிவற் பட்டியில் சாதுக்கள் மடத்தில் தங்கியிருந்தான். அபிப்பிராயத்தை அனுபவிப்பான். அட்டமாசித்தியில் பொலிவுறுவான்.

கதிர்காமக் குருநாதன்

[கதிர்காம இரகசியம், என்று ஒரு நூல் வெளிவரும் ]

(அதில் முழு விபரமும் வெளிவரும்.)

உ

குமரன் றுணை.

இராஜமன்னார்குடி வீட்டிலிருந்து கதிர்காமம் புறப்படும்போது பாடியது,

---

(அங்கமெல்லாங்கொள்ளை கொண்டிடுந்தீரன்) என்ற மெட்டு.

பல்லவி

ஆசை மிகக் கொண்டு வெட்க மாகி நின்றேனே-அந்த
ஆணழக னுகுங்கந்த னேடிருந்து நானுங் கொஞ்ச (ஆ)

பல்லவி தொடர்

அந்த மதப்பய லோவெனி லோயிவ
னிந்த விதப்படி யேவரு வேதவன் (ஆ)
அப்புற மிப்படி விட்டிடி லோயினி
யெப்படி தப்பித ணிப்பது நான்றனி (ஆ)
அணைத்த விதத்திற் பிடித்து சுகிக்க
தொடுத்த வினைக்க ளனைத்து பறக்க (ஆ)

தொடர் முடுகு

அந்தப் பாவி யாகிடு மாமதன்
சொந்தக் கூறு வேலெறி வான்கணை
வந்துப் பாயு தேயிவ னேடணை
யிந்தக் கால மேசரி சரிசரி (ஆ)

---

அழகாபுரி யென்கிற கீழச்சிவற்பட்டி பஜனை மடத்தில் பாடியது.

---

(கல்யாணஞ் செய்துவையுமே என்ற மெட்டு)

பல்லவி.

இந்த வேளை வந் தாதரி-அவ
தாரக் காரியா ரூப நாயகா (இ)

## பல்லவி தோடர்

இக பர சுக மளி யிது தநி யெது வழி (இ)
இப்புவி யிக்குமி ழிக்கட லெத்திட (இ)
இக்கரு மப்பை புட்குழி யிற்பி
றப்பெனு சொற்க லக்கமு மற்றிட (இ)

## சரணம்

பந்த பாசக் கடல் விட்டகலாமலே
பர தவிப் பவனுக்குன் னருள் கிடைக்காமலே
யிந்தவிதப் புலம் பலிவிருந் தால் நானெ
யெப்படி தப்பிபி ழைப்பது மேலே
செப்பிடு வொப்பிட விட்புர மாலே (இ)

## இதுவுமது

(கபர தர ஹாத் என்ற மெட்டு)

ஆதர வில்லே யென்னே
யாட் புரிவாய் கேட்டென் சொல்லே (ஆ)

## தோடர்

பூதகிப் பாலுண்ட போது மிகு வெகுண்ட
மாதவன் மண்பி ரண்ட மாதிரி யண்ட பிண்ட
மனைத்து மனங் கலங்க
மதித்திட்ட பின் விளங்க
வப்பொழு துக்கிர மூங்கண்ட
தக்கண மக்கட லங்குண்ட
லக்கல னப்பொலி வன்றுண்ட
னுக்கரு ளப்பதி ஸ்ரீவைகுண்டா (ஆ)

---

## இதுவுமது

ஷெயூர் சாதுக்கள் மடத்தில் பாடியது.

## சந்த விருத்தம்

காடுநிறை யானைபுலி யோடுலவு சூழுகதிர்
காமமிட மாகவுள போதகுரு நாதா
பாடுயிது யானவட மேவரவு காசுமிலே
பாசமிக வேயுளது யோசனை யிலே

வீடுபல வேறுழைய வேணபொரு ளானவரு
மீகையிலை யேதுமிலை யாதலி ஞு
லாடுமயி லேறிகுற நாயகியி ஞேடுவா
வேணுமிது வேளைதனி லாதர வார்.

---

இதுவுமது

ஷை கீழச்சீவற்பட்டி, பெரிய தேனப்ப செட்டியார் குமாரன்
அழகப்பச் செட்டியாரைச் சந்தித்துப் பாடியது.

வண்ணம்

ஆயிரத் தலைப்படத்தன் மீதுவைத்த ழைத்தசத்த
சாகரப்ப ரப்பமைப்பி லே சிலவ ளம்படைத்த
மிகு பொரு டங்குஞ் சீவற்பட்டி
நில மது சொந்தம் நோன்பிபற்ற
வரு தவ மென்றுஞ் சேர்த்துழைத்த
பல னிது தந்துஞ் சீர்த்தி பெற்ற
தேனப்ப னுக்குதித்த வேதப்ப னழகப்ப
ஞனவன் மிகுசுத்த வானெனப் பலர்மெச்ச
தகவல றிந்துஞ் சாந்த முற்ற
வகையி றகண்டும் பேச வைத்த
பொருளிது வென்றுஞ் சேர் நிறைக்க
தருணமு முங்கண் வார்மதிக்க
ஒரு லக்கம் பொன் பெரு
கிட வைக்கப் பண் ணிரு
கர முற்ற புன் னகை
முக சித்த னருட் கடல்

தங்கிவி ளங்கிநி றைந்துத தம்பிநெஞ் சுந்தர—வுன்
றம்பதி யும்பல குஞ்சுகு ழந்தைக ளுந்திர—முற்
றெந்தவி தந்தனி லும்பொருள் பொங்கிட வென்னுளக்—குற
நம்பிய னின்மரு கன்னவன் றண்ணருள் வந்திட—வே
யிவனொரு தமிட்கும ரனுமதிற் சிறந்தவ
னெனும்படி நடப்பவ னிதுததி யிவண்வர
நானுங்கதிர் காமஞ்செல வேதுணிந்தே னதவினு
லீதுவேளை யாகுமைந்து ரூபாய்கடு தாசிதர
வேணுங் கோறி வந்தனனே

---

## பொது

இராகம்—வசந்தா. தாளம்—ஆதி.

பல்லவி.

திருப்பரங் குருக் குலத்தோன் திருச் செந்தூர்
திருப்பதி யே ரகத்தோன் திருவளர் குன்றக்குடி (தி)

அநுபல்லவி.

கருப் பெருங் குழிக்கரை கடந்திட வே யக்கரை
யுருப் பொலிந் திடுவரை யுதவா துதவா துரை(திரு)

சரணம்.

மாயப்ரப சம் சாரம் மதித்திடி லோ வபாரம்
காயம னப்ர காரம் களைத்தேன் பல விசாரம்
காண அலங் காரம் கலன் வேணுஞ் சிங்காரம்
கந்தா வந்து யிந்நேரம் கண்டு செய் யுபகாரம் (தி)

---

திருப்பரங்கிரியில் பாடியது.

பல்லவி

இராகம்—பியாக்கடை தாளம்—ரூபகம்

குன்றினுள் நின்று விளங் கிடுந் தேவா-குறக்
குன்றினை யொத்த தனத்தியள் மோகா [கு]

அனுபல்லவி

கன்றுக ளன்று புல் தின்றிட
வுங்கட லிற்றுயிற் கொண்டிட
முன் துரி யன்சபை செல்லவு
ருந்திக டந்தவன் மருகா [கு]

சரணம்

பண்டித ஞானம் நிறைந்து ததும்பும் பண்பமை யகத்தா
பாலக னுகிய வெற்குன் பாலருள் மூவிரு முகத்தா
தொண்டனு மன்புட னுன்துதி
கொண்டவ னின்பத மேகதி
கண்டிடவா மயி லுடன் ததி
வண்டினஞ் சூழ்திருப் பரங்கிரி [கு]

---

திருவாவினன்குடியில் பாடியது.

(கடம்பன் கந்தன் என்ற மெட்டு)

அப்பனையொத் திட்  டென்னைப் பெற்ற
ஐயா பன்னிருகண்  புன்னகை
எடுத்துகாட்சி தந்தப்  புறஞ் செல்வாய்
செம் மரகத விகசித
நடித்து காட்டு மயிலுடன்  முன் வருவாய்-வந்து
அத்தனை யப்பிர  ணப்பொரு-ளெப்படி
செப்பிடு வொப்பிட  முத்தியி-னுட்செல
கடம்பணிச் சிவ ருருபர  ஆறு-முகனே
சிலம்பணித் திரு  குறமகளவள்-சுகனே (அ)
முப்புர மழித்த  தோள்வலி-மிகுத்த
முக்கண்ணன்  நெற்றித்-திருவுள
மிருந்து தித்தச் சேவற்  கொடி-படையோன்
சரவண பவகுருபரன்
தேவர்க் கென்ஞான்றும்  புகழுடையோன்-பல
முத்தமிழ் கல்விப்  பயிற்சியி-லுள்ளவ
ருக்கொரு புத்தமு  தத்தை-யளித்திடு
திடம் பெறுந்திண்ண  சுரர்க்-குலசாலன்
திருவா வினன்குடி
யிடத்தை விட்டிப் பொழுதென் முன் வருவான் [அ]

குன்றுக் குடியில் பாடியது.

இராகம் நடை பைரவி - தாளம் ரூபகம்

பல்லவி

இன்னும் மனம் இரங்காத - என்குருநாதா - உமக்கு
இன்னும் மனம் இரங்காதா - என்குருநாதா - உமக்கு. (இ)

பல்லவி தொடர்

இந்தா வென்றே கந்தா - தந்தாண்டிட (இ)
இவன் பலகல வணிந்திட நின் (இ)
திரு வரு ளது வழிக் தொழுதிட (இ)
இழியுமை குல முன வரை பெற (இ)
பிணி யழ கல வர விட தா (இ)

சரணம்.

முன்னம் அசுரர்க்கு முத்தி கொடுத்தவா
முக்காலும் மென் மனக் கண்ணால் நினைத்தேன் வா
அன்னம யிலாடும் வா கனம் பார்த்தவா
வர் திறங்கி யென்றன் வாழ்வை நினை தேவா
வழி யெது யிக பர சுக மது
பழி வரு மினி தா ததி யிது
வந் திப்படி
முன் நிற்கிற
குன் றக்குடி
சந் நித்திட

---

கழுகுமலையில் பாடியது.

(வேந்தருக்கு இல்லை காந்தர்வ மணம் என்ற மெட்டு)

---

கழுகுமலைக் குமரனடி காண—என்
கர்ம பந்த மான தது
கடந் தகன்று போன அக்
காரணத்தால் காவடி யென்றோளில் வரலான

புழுகு மணம் வீசிடும் பொற் பாதன்—இரு
பூவையர்க்கு நல் காதன்—பல
பொருட் பிரணவ வேதன்—மணம்
போற்பலவர மேதருஞ் சிவ தேசிகன் குரு நாதன்

ஆறுமுகத் தண்முகத்த னாமே—நமக்
கந்த வினைப் போமே—மிகு
ஆணழக னாமே—அவன்
ஆடி வினை யாடி வரு மாமயில்க ளாமே

கூறுவடிவேல் பிடித்த கையன்—அவன்
குமரன் முருகு கையன்—மிகு
குண முனைவன் மெய்யன்—இங்கு
கோறு வார் தந்திட விரைவோடு வந்திடும் பையன்

---

இராகம்—கல்யாணி தாளம்—ரூபகம்

பல்லவி

சந்நிதானமே
குன்றக்குடி பண்டார சுவாமி (

அநு சரணம்

முன்னே மன் ருடிடும் பிரான்
முடியே சடை கொண்ட தம்பிரான்
என்னே யிவ னுக் கிரங்கிடுவான்
என்பங் கின்பம் பொங்குஞ் சிந்தென்றிடுஞ் (

காதலோ மிகப் பொல்லாதே
காண வழி வேறு யேதே
ஆதலாலே யடிமை சாதே
அன்புங்கொண்டென் பண்சிந்துங்கண்டிடுஞ் (

நாடி வந்த துண்டோர் கார்யம்
நல் முகூர்த்த நாளின்னேரம்
ஆடிடச் செய்திடி லபாரம்
அன்றங் கின்றிங் கென்றும் முன்னின்றிடுஞ் (

---

வண்ணம்

நெருறுமிந்தப்—படந்ததாமரை
பூமுகமென்னக்—குளிந்தமா திவ
ளோடுசுகந்தக்—கடம்ப மாரணி
வாருமிருந்துக்—கலந்தமாதிரி

விருந்துந்தம்—பலந்தஞ்சிந்
திடுஞ்சம்பந்—தமுங் கொஞ்சங்
கடந்தின்பங்—கனிந்தங்கென்
றெழுந்தும்பன்—சிதைந்துஞ்சிந்

தேபடித்திட—னூனுறைப்படி
பூபரப்பினி—லாடுமெத்தையி
லேபடுத்திட—வாரிருக்கிய
மாசெழுப்பலெ—யேதணித்திட

நகக்குறிபல பத்து—யிருப்பது மிகு பித்து
பிடித்தது யிது தத்து—வெனச் சொலமன தொத்து

காமுறு விரதங்—கண்டன் பானவ
நாமிருவருமொன்—றங்கென்னுமென
வாயிதழதாங்—தந்துஞ்சேரென
வேயிதழதாங்— தந்திந்தாவென

ருசித்திட —மதக்கணை
படுத்திய— விதத்தினை
நகைப்பிது— வுரைத்திட
யிடைத்துணி— ணெகிழ்த்திட

படுந் துன்பம்— படைத்தின்பம்
யிது வென வது ததி கிடக்க விட்டு
கொடுஞ் சமரங்—துடைத்துன்பம்
மிகு வலி பெற நடு நடுக்க முற்று
அடங் கொஞ்சங்—கனக் கும்பம்
பல நக குறி பட கடுக்க தைத்து
உடம்புஞ்—சங்—கிலித்—தொங்கப்
படங்கண்—டங்—கிடப்-பொங்கப்
பிடஞ்சந்-துங்-களித்-தின்பக்
குடங்கொண் - டுஞ் – சொரித் - தங்கப்
பதித்திட யிருவரு மொருப் பிடித்து
பலற்பல விதவித கலைத் தொடுத்து
கலக்கனி யமுதுள யிதழ் கடித்து
யினிப்பிலு மினிதென மதுக் குடித்த
தினத்தி லிருந்து பித்த
மயக்க முனைந்து சுத்த
யிடுப்பு மெலிந்து முட்ட
கதுப்பு வழிந்து கொட்ட
பூமக்கதிர் - காமப்பெரு - மானுக்கொரு - னொருப்பெண்
ணேனிப்படி - வாதிப்பது - போடிப் போடி - தோழிப் போடி
புத்தி யித்து கத்தாதே பொன்
னத்தான் வரும் வேளையிலே.

---

## யாழ்பாணம் திருமேனி ஞானயோகீஸ்வரரைச் சந்தித்து நிகழ்ந்தது.

(இந்தர லோகச் சந்திரிகை மண்டபமே என்ற லாவணி மெட்டு)

உந்தி மே லெழு கின்ற செந்தண லண்டமே—அதி
னுட் பறப்பி லுயர்ந்து வந்தது பிண்டமே—பல
வுட்பொரு ணிறைத்து விட்டது வுண்டமே
நேரிற் கண்டோமே— வாதண்டமே—நல்லூர்
உக்ரமித்திடு சக்ர வேற் கொடி தண்டமே

சிந்து மோதிட – முன்றுலங்கிஞ ஞதியே—நிற்க
சிற்பரத்தினி லுற்பவித்தது சோதியே—அங்கு
சிந்தை நொந்துத வித்த தந்தச் சேதியே
ஒரு பாதியே – கூட வீதியே செல்ல
சிக்கறுத்துப தித்தது நற் பிரீதியே

கண்டு நேரிட வந்திடுவோ மென்றல்லோ—காகங்
கத்தும் வேளை விட்டெழுந்தோ மன்றல்லோ—இரு
கண் விழித்துகொ ழும்புத்துறை சென்றல்லோ
அங்கு நின்றல்லோ சுவாமி யென்றல்லோ—சொல்ல
கடு கடுத்துடன் வழி விடுத்தது மின்றல்லோ

சண்டை யோபல – வந்த மாகிட விட்டதே—பின்
சத்தமு மொடுங்கிக் கொஞ்சங் தொட்டுதே—அந்த
சந்தருப்ப முந்தெரிந்து யொட்டவே
சொல் முட்டுதே - சேதி திட்டுதே—வந்த
சங்கதிக் கிசைந்து பல கொட்டுதே

அந்தோ வருள் - நின்ற தங்கம் பலமே – கன
லங்கு நின்றி லங்கிடுஞ் சுந் தரமே – என்னை
யன்றணைத்திட வுஞ் சிறந்தது தலமே
நல்ல நிலமே - திருவுளமே எனக்
கன்புடன் கை தந்தது மாம் பழமே

விந்தையே யிவன் வீடு வந்திட வேகமே
விரைந் தோடி வந் துண்டானதுங் கன வாகுமே - யதை
விஸ்தரிக்க கண்ட இன்பப் போக மே
தலை யேகமே —வான்
விட்டிறங்கி செய்த தபி ஷேகமே

---

இதுவுமது

கீழச்சிவற்பட்டி பஜனை மடத்தில்
தஞ்சாவூர் - பாபவிநாசத்திற்குச் சமீபம்
மேலைக் கபிஸ்தலம்
விகடகவி R. சுப்ரமண்ய ஐயர்
விகடித்த போது பாடியது

வெண்பா.

கால் காட்டு மங்கையர்தன் கதை காட்டி விகடித்த
பால் காட்டு பிர்மகுலப் பாவலா - வேல் காட்டுஞ்
சிவசுப்ர மண்யப்பெ ருமனுக்கொ ருளபுத்ர
தவ சுப்ர மண்யனுந் தான்

---

இதுவுமது

ஷை கீழச்சிவற்பட்டி மு. சா. மு. மு. கருப்பஞ் செட்டியாரைச்
சந்தித்துப் பாடியது.

---

இராகம்—ஆரபி தாளம்—ஆதி

பல்லவி.

ஏனெனக்குப் பெருங் கவலை—யென்னைப்
போலவுள்ள பெண்கள் பல
மாதிரி செய்யப் பொன்னகை (ஏ)

அநுபல்லவி.

கானிருக்கும் புள்ளிபல மானிருக்கு மத்தகக்கொம்
பானிருக்குஞ் சத்தரத்தில் நானிருத்தலுந் தகாதே (ஏ)

சரணம்.

நாணி லத்தி லெங்கள்பெரி யோரிரைத்த நினைக்கநீ
காயப் புனக் காவலுக்குச் செல்லவோ— அங்கு
நானொருத்தி தன்னந்தனி யாயிருக்கும் வேளையிலே
மானோட்டி வந்தவேடன் அல்லவோ—அவன்
மானங் கெட்ட வம்பிழுத்தென்
மானங் கொட்டவே யழைத்தான்
ஈனங் கெட்ட சொற் பழக்கன்
என்னைக் கட்ட வே நினைத்தான் (ஏ)

தோளிற்சுமை யோடுபெரு வாரிநாம மிட்டசெட்டி
கூலிவளை விற்றுவந்தான் அல்லவோ—அங்
நாளிலென்கை யிற்றொடுத்து பாதிக்கையிலே விடுத்து
கைகடுக்க விட்டுவிட்டான் சொல்லவோ—பின்
மேளங் கொட்டி கெக்க லித்தான்
மிக்க மைய லாற் பிடித்தான்
தாலிகட்ட வே நினைத்தான்
தந்தனம் பாடி வா தித்தான் (ஏ)

நீறணிந்த நெற்றியோடு நீண்டசோலுங் கையிற்கொண்டு
நிற்கமுடி யாமற் றள் ளாடியே
கோரரூப மாகவந்த் பேய்க் கிழவ னொடுசம்
சாரஞ் செய்த கட்டம் பள் ளாடியே—பெரும்
போரிழுத்த வம்பனவன்
பொற்கொடிக் கிரங்கினவன்
நாருரித் த ழும்பனவன்
நாரியின் கை பிடித்தனன் (ஏ)

ஆசைபல சொல்லிசெட்டி முத்தமிட்டணைந்து சென்ற
ஆணழகன் போத குருவென்பவன்—சில
வேளைமீது காதலுற்று விட்டனனே யெனவெண்ணும்
வேளையிலே வந்தனழைத்துச் சென்றவன்—அங்கு
மீசையுள்ள தேவடித்தி
மினுக்குப் பெண் ணைவத்தி
யேசிடத் தூரத் துறத்தி
யிருக்கப் பெரியார் வெற்றி (ஏ

சேடிப் பெண்க ளோடு விளை யாடிக் கொண்டிருந்தவளை
சிக்கலிலே விட்டிழுத்தா னல்லவோ - கொண்
டாடிக்கலியாணஞ்செய்தும்பின்னழைத்துப்போக-நாதி
அன்னை தந்தை யில்லாதது சொல்லவோ - அவன்
கூடிப் பேசி கொஞ்சி யிட்டான்
குற்ற மற்ற வம்புமிட்டான்
வேடிக்கை கொண்டாடி யிட்டான்
வீதியிலே விட்டு விட்டான் (ஏ)

ஒட்டாண்டிமாமன் பேயன் பெற்றபிள்ளை மோட்டாண்டிக்
காசைபட்டு வாழவந்த தல்லவோ பின்
காட்டாண்டி யுங்கலனும் போட்டாண்டிட நினைத்தான்
காட்டாண் டிடுவர்கள் முன்னல்லவோ மேல்
பாட்டாண்டி பண்படித்தான்
பற பறப்பாய் கை பிடித்தான்
கேட்டாண்டி யெனைத் தொட்டான்
கீர்த்திக் கனுப்பி விட்டான் (ஏ)

ஆண்டிக்கு வாய்த்ததங்கு ஐந்துங் கூன் குரு டென்பர்
அமைந்த கொழுந்தனவ னல்லவோ வயிற்றை
தோண்டி தோண்டிவைத்திருப்பான் கொட்கொட்கொள்வதில்லை
தொந்தரவு மிக்க யிது சொல்லவோ நிற்க
வேண்ட மட்டு மலைக் கொட்டை
வெள்ளரித்தித் திப்பு மிட்டே
வேண்டமட்டுஞ சமைத் திட்டேன்
வேக வைத்துகளைத் திட்டேன் (ஏ)

ஆரமாரப் பாராது ஆசை வெட்க மில்லாது
ஆண்டியை மணந்து கொண்ட தல்லவோ பல
பேரிருந்து மாண்டிச்சிபெண் பேதிளம்ப விட்டுவைத்த
பேர்வழிக ளண்ணன்மார்கள் சொல்லவோ மேல்
ஆனதினா லண்ணமாரே
அருமைத் தங்கைக்குச் சீரே
வேணமட்டுஞ செய்வீரே
வேடிக்கை பார்த் திடுவீரே (ஏ

தாவணி பட்டில்லை தங்கக்காப்பு தோடு மோதிரம்,
தாலிச்சரடு கொலுசு அல்லவோ இதை
யேயணிந்து கொண்டா லென்னை- பேளனம் பண்ணுஞ்சிரிக்கி
யிருப்பா ளொன்றுஞ் சொல்லாமல்சொல்லவோ இவள்
ஆவலுற்று வந்தாள் நெஞ்சம்
அணிந்திடக் கலன் தங்கம்
பாவ மென்றெண்ணிச் சொந்தம்
பவுனும் விலையிற் கொஞ்சம் (வ)

பார்க்கவரும் பெண்களென்னை பார்த்துகேலி பண்ணுகிறா
ரில்லைபட்டு சொல்லநகை அல்லவோ சொல்
காக்கவெனக் கண்ண னண்ணி தம்பிகளுண்டென்று சொல்லி
கண்டு போக வந்ததிது சொல்லவோ
சீரிருக்கப் போயிருக்கச்
சீவல்பட்டி நாடிருக்கச்
சீருஞ் செல்வ முஞ்சிறக்க
செல்வ கருப் பஞ் செட்டியிருக்க (வ)

---

இதுவுமது

ஷை கீழச்சிவற்பட்டி, அள - அ - சொக்கலிங்கஞ் செட்டியார் சாதுக்கள் மடத்திற்கு, ஐம்பது ரூபாய் கொடுத்தனுப்பியதற்குப் பாடியது.

இராகம் தன்யாசி தாளம் ஆதி

பல்லவி.

வீடு தேடி ஐந்து பத்து ரூபாய் கொண்டு வந்து தந்தான்
விற்பனன் சொக்க லிங்கனே (வீடு)

அநுபல்லவி.

காடு கதிர் காமத் தானே-கண்டானந்த முங் கொண்டானே
கட்டளை - யிட்டது - மப்பணி - யத்திரு
கட்டுவெ - ளிப்பட - புத்தக - மச்சிட (வீடு)

### சரணம்.

உள்ளபடி யன்ப னுள்ள - னுத்தமக் குணப் பழக்க
னுண்மை மொழி யிற்சி றந்தவன் - பல
வுத்தமப்ப யிற்சி வகை - யத்தனையி னுட் பொருளை
யுண்டுங் கண்டதைத் தெ ரிந்தவன்
கள்ளங்கப டில்லாதவன் காணமிக்க வேயழகன்
கற்பக மத்தரு மப்பொரு வர்க்கிணை
செப்பிட வொப்பிடு சுத்தம னத்தனன் (வீடு)
ஆதி பா னுக்கு வேத மோதி நீதி யேயுரைத்த
வப்பிரண வத்த னருளே - பின்
அன்னவர்க்கு நின்றிலங்க - வப்பதத்தைப் பெற்று யென்று
மனைத்தும் பெருகப் பொருளே - மேலும்
கோதிலா பொன்னுஞ் சேர்க
கூடி யெந் நாளும் வாழ்க
குற்றம தற்றவ னிப்புவி மெச்சிட
தற்பா னுக்கொரு புத்திர ரத்தினம் (வீ

---

வைத்தீஸ்வரன் கோவிலில் பாடியது.

---

### விருத்தம்.

பள்ளிருக்கும் பாற்கடலான் பரப்பெருமான்
பரந்தாமன் பழுத்த வெற்றிக்
குள்ளிருக்குங் குருபெருமான் குருநாதக்
கொடியுடையான் குறிப்பறிவான் கோமான்
வள்ளிருக்கும் வடிவழகான் வந்தவர்தம்
வடிச்சிலையான் வழியு மானன்
புள்ளிருக்கும் வேளூரான் புகழுடையான்
பொற்பதத்தை போற்றல் செய்வாம்

கள்ளிருக்குங் கருங்கடலான் கரைகடக்குங்
கடற்கரையான் கண்டோ ருள்ளத்
துள்ளிருக்குந் துணைப்பெருமான் தூணிருக்குஞ்
சுகப்பெருமான் துணையு மானன்
தள்ளிருக்குந் தண்பெருமான் தண்மனத்த
னின்பெருமான் தனித்து கண்ட
புள்ளிருக்கும் வேளூரான் புகழுடையான்
பொற்பதத்தை போற்றல் செய்வாம்

உள்ளிருக்கு முட்பெருமான் உம்பர்பிரான்
உட்பொருளான் உமையவள்தன்
விள்ளிருக்கு மிப்பெருமான் வினைமுடிக்கு
வேற்பெருமான் விரிந்த மயில்
துள்ளிருக்குங் குகப்பெருமான் தொந்திபிரான்
தனக்கிளையான் தொந்தனத்தான்
புள்ளிருக்கும் வேளூரான் புகழுடையான்
பொற்பதத்தை போற்றல் செய்வாம்

---

அட்டமாசித்தி பட்டமங்கலச் சந்நிதானத்தில்
முதன் முறை பாடியது

இராகம்- தன்யாசி- தாளம் ஆதி

பல்லவி

காசி வாசி வாகுங் கதிர் காம வாச நின்கருணை
காண வந்தா னிங்கு யாரையா

அநு பல்லவி

வீசுமாசையைக் கடந்தோன்
வேணபொருளுக் கிசைந்தோன்
வித்தக தற்பர முப்பொரு ளத்தனை
விற்பன முற்றிடு முத்தம பக்தனை

சரணம்

வானமுள தேவர்பல- ரானவரும் வந்திவனை
வாழ்த்திடு மனக் குணாகரன் பலர்
வந்திரங்கிக் கெஞ்சி நிற்பவருக்குத் தங்கக்கருணை
வாரிதியைப் போ லா பரணன்
ஞானமுந் ததும்பக் கொண்டான்
ஞானப்பா லமுது முண்டான்
நட்பின னெத்தனை நற்றவ முற்றன
னப்பிற விக்கட லெத்திட பெற்றவன்

நேரிற்கண்ட போதுபெரு வாரியாகுஞ் சைவநீத
நிட்கள நிராமயந் தானே அங்கு
நிற்பதவ் வொளிப் பரப்புக் குற்ற நிலையிற்பதித்து
சொக்குருகு முன்னந் தானே
காரினிற் போலாகும் மழை
காணவந்தா னிங்கோ ரேழை
கண்டுருகி நிந்து யிம்மன மென்பது
கண்டன வுண்டது வந்தும றைந்தது கா

காட்டினிற் கண்டது பொம்ம லாட்டமென மக்கருத்தின்
கற்பிடிப்ப னப்புறச் சொல்லால்— பின்
நடப்பதற் கிசைவா முறைப்படி நடத்திடு
நன்றி மிக்கோ னிகை வள்ளால்
பாட்டினிற் மிகப் பிரியன்
பக்தர்கள் மனத்துரியன்
பட்டது யெத்தனை யம்பெரு கட்டம்
பத்தகி யப்படி பெற்றிடசட்டம் கா

ஊரினிற் சிறந்து செந்நெல், போரினை மேருவாய்க்கொண்ட
துள்ளது பாட்டமங்கலம் — அதில்
உள்ளபடி வுள்ளன்பு நிறைந்தத தம்பிடுஞ்சுக
னுத்தம னுள்ளமு மங்களம்
சீரினிற் சிறந்த காசி
செட்டியாரைக் கண்டு பேசி
சிற்பர மக்கட வட்பொரு ளுட்பொலி
கப்பெரு மற்புத யத்வைத சித்தநை கா

ஆதியந்த மில்லாபெருஞ் சோதி கரும்பீசனவன்
அந்தரங்க முன்மனத்தி லிருக்க—அந்த
ஆண்டவன் திருப்பணியை பூண்டுலந்த தன்பலனால்
அத்தனை மனக்கவலை பறக்க
போதிய பொன் வீடு கோடி
பொன்னியுர் தாண்டவ மாடி
புட்பம லர்த்துதி நித்தமு மர்ச்சனை
வைத்திடு மப்பய னக்கருணை பெற கா

## அட்டமாசித்தி பட்டமங்கலம்

### நயினப்பன் கரும்பீசன் உமை மங்களாம்பிகை சந்நிதானம்

### வி. சொ. ராம. காசி செட்டியார் பாடியது.

இராகம்—மோகனம்    தாளம்—ஆதி

திருச்சிற்றம்பலம்    திருச்சிற்றம்பலம்
திருச்சிற்றம்பலமே

திருவளர் கன    மிணைகுண சபை
நிறைவளர் கரும்    பணிதுரை சிவ (தி)

தரு பொற்பம்பலம்    நிறை செப்பின்பலம்
வரு நட்பம்பலம்    மதிமெய்ப்பிந் துரை
யாட்சி யஞ்சுரை    காக்ஷி நன்பிசை
மாட்சி யன்பணி    வாக்ஷி நன்றுணர்
தானணி நன்கனக    மாசபை மங்கை நகர்
ஞானணி பொங்கிடமெய்    யானது கண்டுணர்வீர் (தி)

மங்களம் நன்கன    தங்கமை யிங்குமை
சங்கணி பொங்கிட    மங்கள மென்றுரு
கொண்டன    ரின்பமை
நன்றுரை    நன்பொர
நன்றிசை    நன்கணி
தம்பல    மிங்கதி
நாட்ட    மன்பிசை
கூட்ட    மின்புறை
யாட்ட    மெண்குண
மாக்கம்    நன்பெற
ரஞ்சித குஞ்சித    மன்பணி பொங்கிட
பதத்திஞெலி யெண்    ணணிப்பு கெணிகல்
லஞ்சுரை யண்டிசை    நன்றென கொண்டி
விரிப்பு மணமெய்    யணித்தென்னிறைய
மிகசன குண    கனமண யிணை
தருபலனிறை    நலமணியென
நயதுரை சிவ    பதிகலரிசை
சபையிதுவென    ஜெகமொலிபெருக் (திருச்)

---

அட்டமாசித்தி பட்டமங்கலத்தில்
நயினப்பன் கரும்பீசன் உமைமங்களாம்பிகை
சந்நிதானத்தில் பாடியது.

—————::—————

செந்தமிழுலகினில் என்றமெட்டு.

அட்டமாசித்தி பட்டமங்கலத்
தப்பன் நயினப்பன் சேவை - அவன்றுணைக்
கமைந்த மங்க ளாம் பிகை
அவரிரு வருமன மகிழுட னெழுவல
தனைவரு மிருவதி சயமுற நடமிடு அட்
அழகிய சிவபத சபையிது வமைபெற
வனமமை பலரிது சரியென நடமிடு அட்
அவரவ ருடமன துருகிட பெருமுகி
லினிதிடு மழையென வருளொடு நடமிடு அட்
அணையினி யொருகண பொழுதது பொறுவென
அரைதர மறையது வழியிலே நடமிடு அட்
அணைத்த விதித்தி லெடுத்து விடுத்த
பதத்தை மனத்தி விருத்த நடமிடு அட்
அந்தரமி ருந்துதேவ துந்துமியோ டிந்திரரும்
வந்திரங்கி கூடிடவே யுங்கருணை நடமிடு அ
அக்காலையி லப்பாவென சொற்பேசியே ணைத்தாயினி
யெப்போது கலப்பாயிது செப்பாய்நயி னப்பாயிடு அட்

———

இராகம் ஆரபி தாளம் ஆதி

பல்லவி.

நீண்ட வேல் கையில் தோணுதே - பிடித்து
நிற்பவ னிளம் பிராயம் போற் காணுதே நீ

பல்லவித்தொடர்.

நித்தமுஞ்சே வித்துழைத்த
பத்தனும்பா டித்துதிக்க நி
நெக்குருகு முன்னணுக்க
குட்பதப்பொ ருள்கிடைக்க நீ

நினைத்தபடுக்கு எடுத்தபதத்து
கருத்து நிறைக்க உரைக்க மதிக்க
நிட்களத்தினி லுற்பவித்து
சித்துலக்ஷணை முங்கிடைத்திட
ஙிகரொழு - வருமுல கினிவிலை - யெனுமொழி
அகமகி - ழுதிசய மிதுவென - மனமெழ

சரணம்.

வேண்டிடும் அடியவர் வினைதவிர்த்திடுவான்
வித்தகத் தண் மனக் குடி புக்கிடுவான்
மூண்டிடும் ஆசைகளைத் தணித் திடுவான்
முத்தமிழ் - வல்லவ னிப்படி - யிங்கெழ
யெத்தனை - நற்றவ மிப்பய - னுற்றது

---

இராகம் நடை பைரவி தாளம் ஆதி.

பல்லவி.

சித்தொன்று தந்திடு பெத்தப்பா நயினப்பா

பல்லவித்தொடர்.

சித்தாதிக - ளப்போதைய ரப்பாபிர - மித்தாடினர்
சிற்போதம - தைத்தாவெனு மிப்பாலக னுக்கேயருள்
செப்பாயுல - கொப்பாமிது யப்பாநயி - னப்பாதகி

சரணம்.

அத்தாள் என் கை முனம்
அன்னோர் வெள் ளிப்பணம்
வைத்தா னதன் மனம்
வந்தாண்டித் தருணம்
பத்தா போய் வா யினம்
பரிந் தனுப் பினன் கனம்
பித்தே பிடித்துச் சுழலாமோ யிவனின்னும்
பிற்காலம னப்பேயர்க
னப்பாசரி லைப்பாருன்

---

## அட்டமாசித்தி பட்டமங்கலம்

நயினப்பன் கரும்பீசன் உமை மங்களாம்பிகை

சந்நிதானத்து

பிரமஸ்ரீ வீ. சொ. ராம. காசி செட்டியார் பாடியது.

---

குணத்தானை குணமதிநற் குணத்தானை
கூலமணி நிறைவளர் நே
மெணத்தானை யிணைமண்மா தெணத்தானை
யெனதன்னை வளருமை மா
மணத்தானை வளர்பணிசே மணத்தானை
மட்டிலா நிறை பூத
கணத்தானை கனநிறைநற் கரும்பினனை
கனபணி சே கனமாவார் கன நல்லோரே.

இனிவானை இசைநிறை நல் லினிவானை
யெழில் செய்யுங் கருணை நல்
லுனிவானை யுணரமை கொண் டுனிவானை
யுதைய மணி நிறை யருளே
யணிவானை யன்பணிசே மணிவானை
யடிமை கொண் டுணர் நாட்டிக்
கனிவானை கனதுரை மா கரும்பினனை
கனபணி சே கனமாவார் கன நல்லோரே 2

பலவானை பணியுமுளர் பலவானை
பாப்பணி மா மெய்ப்புளர் தம்
குலவானை குறியணிமேற் குலவானை
குணமதி மா தவரீத்
தலவானை தக்கமைநிறை தலவானை
சன்மார்க்க மடை நிறைவு
கலவானை காசிரங்கொள் கரும்பினனை
கனபணி சே கனமாவார் கன நல்லோரே. 3

தருவானை தலைமை கணத் தருவானை
தக்மையணி யுளம் நிறைவாக்
குருவானை யுண்மை மகிழ்க் குருவானை
யொப்புவமை யளவிலா
திருவானைத் திருநடனத் திரவானை
தினஞான் மதிதருகும்
காவானை கற்பகமா கரும்பினானை
கனபணிசே கனமாவார் கன நல்லோரே 4

மனவானை மகிழன்பர் மனதானை
மதியணியு முறைதரு நேங்
குணவானை குறிதிகழுங் குணவானை
குஞ்சிதனை நடன துரை
தினவானை தினைபணிவோம் தினவானை
சிறப்புவமை யளவிலாக்
கனவானை கதிப்பணிமா கரும்பினானை
கனபணிசே கனமாவார் கனநல்லோரே 5

மதியானை மனதெண்ணு மதியானை
மட்டிலாக் கற்பகமே கைகொண்ட
நிதியானை நிறைபணிசெய் நிதியானை
நினைவுமகிழ் நிறைதருமெண்
விதியானை மெய்யுளர்க்கே விதிமானை
விரும்பநலங் கரும்பதுவாங்
கதியானை கண்ணுதலே கரும்பினானை
கனபணிசே கனமாவார் கன நல்லோரே 6

பண்டானை பாரின்முதற் பண்டானை
பரம்பொருளே தானுழ்கை
கொண்டானை குணமிசை நற்கொண்டானை
கொண்டன்பு நிறை சார்டுந்
தொண்டானைச் சுதனுக்குந் தொன்றானை
துதிப்பார் தமக்கினிமை தரும்
கண்டானை கனஞ்செய்யுங் கரும்பினானை
கனபணிசே கனமாவார் கன நல்லோரே 7

பொருப்பானை புனிதுணர்மா பொருப்பானை
புகழ்நிறைவே தானுகி
சிறப்பானை தினமதிமா சிரப்பானை
திகழ்கனமே நிறை ஞான
வரப்பானை வளங்குமுளம் வரப்பானை
மதியணிவு புகழமை தேன்
காப்பானை கனம் நிறைகொள் கரும்பினானை
கனபணிசே கனமாவார் கன நல்லோரே 8

நல்லானை நலமுளர்பால் நல்லானை
நற்புகழா ஞுழுமகிழ்
சொல்வோனை துரைநிரைவே சொல்வானை
துணைமதியே நிறைவேத மணிவுநேச
வல்லானை வளர்மகிழ்நேம் வல்லானை
மட்டிலா நிறைசித்தருகி யன்று
கல்லானை கரும்பீய்ந்த கரும்பினானை
கனபணிசே கனமாவார் கன நல்லோரே

தினத்தானை சிறப்பாணி நலத்தினத்தானை
திரமை பகர் நயினப்ப
னெனத்தானை யெழிலிசைசே யிணைத்தானை
யின்புரையே யிதுமகிழ் நல்
மனத்தானை மனமணிகொள் வள்ளலானை
மணமிசையே நிறை காண்போர்
கனத்தானை கதிப்பு நலங்கரும்பினானை
கனபணிசே கனமாவார் கன நல்லோரே 10



உ

குமரன் றுணை.

இம் மறைப்புத்தகம், அச்சிடவேண்டுமெனத் தெரிவிக்க
காகிதம் மற்ற செலவிற்குப் பணம் வேண்டுமென
சொல்லாமல் விழித்த
ஆநந்தா பிரஸ்
சுப்ரமண்ய பிள்ளையை
பணத்திற்கு அவசரமா இப்பொழுது வேண்டுமா
என்று பாடியது

## வெண்பா.

அச்சிடவே புத்தகத்திற் காகுமிரு நூறதன்மே
லிச்சையிது யார்வகிப்ப ரென்கொலோ—பச்சைமயில்
பக்கதிர் காமக்குரு நாதற்குள பாவிற்கதி
யக்கப்பெரு மானுட்கொளு வான்

---

கொழும்பு
கொங்கோங் அண்டு ஷாங்காய் பாங்க்
சீப் கியாஷியர்
ம. தியாகராஜ் என்பவர்
அச்சுக்கு முழுப்பொருளுந் தந்தனர்.